SHIVAJI

சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

TAMIL WEEKLY

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
30th year
of Publication

25—7—1965

அரசியல், தொழில் வள, சமுதாய நல, கலை, இலக்கிய வார இதழ் ♦ ஆசிரியர்: திருலோகசீதாராம்

# பாங்குகள் தேசீய மயம்?

## தீவிர நடவடிக்கைகள் நடைபெறுகின்றனவா?

பாங்குகளில் ஆதாரங் காட்டாத வெண்ணிலைக் கடன் வாங்கியிருப்பவர்கள் (கிளீன்லோன்) நடப்புக் கணக்கில் அதிகப்பற்று (ஓவர் டிராப்ட்) செய்யும் வசதியை அனுபவிப்பவர்கள் ஆகியோருக்கு ஒரு திடீர் தேக்கமும் முடக்கமும் ஏற்பட்டிருக்கிறது. ஜூன் மாதம் 25-ந்தேதியன்று இத்தகைய வசதியை ஒருவர் எந்த அளவுக்கு அனுபவித்திருக்கிருரோ அந்தத் தொகைக்கு மேல் இனி அவ்வசதியைப் பெற முடியாது. உதாரணமாக உங்களுக்குப்பாங்குநடப்புக் கணக்கில் அதிகப்பற்று வசதி பத்தாயிர ரூபாய்க்கு ஏற்பட்டிருந்தாலும், மேற்படி ஜூன் 25-ந்தேயன்று உங்கள் அதிகப்பற்று ரூ. 300 தான் ஆகியிருந்ததென்ருல் இனி அந்த 300க்கு மேல் அதிகப்பற்று செய்யும் உரிமை கிடையாது. அதாவது உங்கள் அதிகப்பற்று எல்லை பத்தாயிரமென்பது ரத்தாகி 300க்கு வந்து விடுகிறது. ஒருக்கால் அந்தத் தேதியில் பத்தாயிரமும் உங்கள் அதிகப்பற்று ஆகியிருந்தால், தொடர்ந்து அதிகப்பற்று எல்லை பத்தாயிரமாகவே நீடிக்கும். பங்குகளில் உங்கள்பேரில் உள்ள வெண்ணிலைக் கடன்களுக்கும் இந்த மாதிரிதான். ஜூன் 25-என்பது உங்கள் நிதி வசதிகளை நிர்ணயிக்கும் முகூர்த்த வேளையாக நிர்ணயித்திருக்கிருர்கள்.

பாங்குகளின் நிதிகளைத் தனிப்பட்டவர்களுக்கோ வியாபார ஸ்தாபனங்களுக்கோ கடனுகவும் முன்பணமாகவும் வட்டிக்குக் கொடுக்கும் எல்லையையும் மொத்த அளவையும் கட்டுப்படுத்தி ரிசர்வ் பாங்க் கட்டளை பிறப்பித்திருப்பதன் விளைவாகவே, இப்படி ஒரு திடீர் சூழ்நிலை ஏற்பட்டு இதனுல் பலபேர் பெரும் சங்கடத்திற்கும் பொருளாதார நெருக்கடிக்கும் உள்ளாகியிருக்கிருர்கள். என்ருலும் ரூ. 5000-வரை நிதி வசதிகளைப் பாங்குகளில் அனுபவித்து வரும் சிறிய வியாபாரிகள் தனிப்பட்டோர் உடனே இதனுல் இடர்ப்பாடு அடையாமல் சுதாரிக்கும் பொருட்டு அவர்களுக்கு மட்டும் சில பாங்குகள் விலக்களித்துள்ளன என்று தெரிகிறது. இதன் விளைவுகளைப்பற்றியும் தொடர்ந்து இந்த ஏற்பாடு எப்படி நடைமுறையில் அமுலாக்கப்படும் என்பது பற்றியும் மேல் மட்டத்தில் அதிகாரிகளும், நிபுணர்களும் கூடி இறுதியான முடிவு எடுப்பார்கள் என்றும் கூறப்படுகிறது. தொழில் துறை முயற்சிகளில் பொது மக்களிடமிருந்து விடுமுதல் தாராளமாகக் கிடைக்க முடியாமல் பணம் பதுங்கத் தொடங்கியது அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கையின் காரணமாகத்தான். கம்பெனிகளின் பங்கு லாபத்தைக் கட்டுப்படுத்தியதுடன், பங்கு லாபத்தின் மீது வருமான வரியும் விதிக்கத் தலைப்பட்டதும், பங்கு மார்க்கெட்டின் உயிர்நாடி ஓயத் தொடங்கி விட்டது. இதன் காரணமாகப் புதிய தொழில்கள் தோன்ருமலோ புதிய கம்பெனிகள் ஆரம்பிக்கப்படாமலோ நின்றுபோய்விடவில்லை. அத்தியாவசியப் பொருள் உற்பத்தியில் புதிய கம்பெனிகளுக்கு வேண்டிய விடுமுதல் தாராளமாகக் கிடைக்காமல் போனுலும், சர்க்கார் பெருந்தொகை கடன்களும் வழங்கியும் சில கம்பெனிகளில் பாதிக்கு மேல் பங்குமுதல் போட்டும் புதிய முயற்சிகளுக்கு ஊக்கம் காட்டிவந்திருக்கின்றனர்.

பதுங்கிய மூலதனம் பாங்குகளை நாடி வரும் பொருட்டு கவர்ச்சிகரமான வட்டி விகிதங்கள் அறிவிக்கப்பட்டன. அதற்குத் தக்கபடி பாங்குகள் வழங்கும் கடன்களின் வட்டி விகிதமும் கூடியது. இப்பொழுது டிபாசிட்களின் தொகை அளவு ஏறிக்கொண்டிருக்கும் நிலையில் தாராள நிதி வசதிகளைக் கட்டுப்படுத்துகிருர்கள். ஆதாரமில்லாமல் நாணயத்தின்மீது வழங்கப்படும் நிதி வசதிகளுக்குத்தான் இந்தக் கட்டுப்பாடு என்ருலும் இதனுல் பாதிக்கப்படுகிறவர்களின் எண்ணிக்கை அதிகமாகத்தான் இருக்கும்.

இதன் மூலம் எல்லா பாங்குகளிலும் சேர்ந்து கூடுதலாகும் நிதி வாய்ப்புகள் அனைத்தையும் சிதறிப் போகாமல் ஆதாரக் கடன்களிலும் ரொக்க இருப்புக்களிலும் சர்க்கார் கடன் பத்திரங்களிலுமாக அவற்றை உருவாக்கும் நடவடிக்கை தீவிரமாகியிருக்கிறது என்பதுதான் பொருள். அதாவது வெகு விரைவில் பாங்கிங் தொழிலை அரசாங்கம் மேற்கொண்டு விடுகின்ற நாள் வருகிறது என்பதுதான் சுருக்கமான விஷயம். பொருளாதார வளத்தையும் அதன் நிருவாகத்தையும் அரசாங்கம் மேற்கொள்ள முடிவு செய்துவிட்டதென்ருல் அதன் விளைவுகளை நாம் தடுத்து நிறுத்திவிட முடியாது. மாறி வருகின்ற அமைப்பில் எந்தக் கசப்பையும் நாம் விழுங்கித்தான் ஆகவேண்டும்.

ஆயினும் ஜனநாயகம் என்ற அடிப்படையில் சமதர்மத்தை நிலைநாட்ட முயலும் நம்முடைய நாட்டில் ரிசர்வ் பாங்கின் சர்வாதிகாரத்திற்கு நாட்டின் பொருளாதாரம் முழுவதும் அடிமைப்பட்டே தீரவேண்டுமென்ற நிலை வரும்போது அதில் ஜனநாயகமும் இராது, உண்மையான சமதர்மமும் இராது. கலப்புப் பொருளாதாரம் ஒன்றுதான் ஜனநாயகச் சாயலையாவது காப்பாற்றிக்கொண்டிருக்கும். பொருளாதார ஏகபோகம் அரசாங்கத்தின் கைக்கு வரும்போது அந்த நாட்டில் ஒரு நிமிஷம்கூட ஜனநாயகம் பிழைத்திருக்க முடியாது. ஜனநாயகம் பிழைத்திருக்காத நாட்டில் சமதர்மம் என்பது நிர்ப்பந்தப் பொதுவுடமையாகத்தான் இருக்குமேயல்லாது மக்களின் கூட்டுணர்ச்சியால் விளையும் சமதர்மமாக இருக்க முடியாது.

ஏற்கனவே நமது நாட்டில் கூட்டுறவுத்துறையென்னும் ஜனநாயக அமைப்பு சரியாக இயங்க முடியாமல் ஒவ்வொரு நிலையிலும் அதைத் தோற்கடிக்கும் முறையிலேயே ரிசர்வ் பாங்கின் பொருளாதாரக் கொள்கை இருந்துவந்திருப்பதை விஷயமறிந்தவர்கள் நன்கு புரிந்துகொள்வார்கள். பாங்குகள் இந்த நாட்டில் சேமிப்புச் சக்தியை வளர்த்து நாட்டின் செல்வாதாரங்களைப் புதிய முயற்சிகளுக்கு வழங்கியும் அரசாங்கத் திட்டங்களின் வெற்றிக்கு உதவும்படியாகவும் செயற்பட்டு வந்துள்ளன. பாங்கிங் தொழிலை முற்றும் அரசாங்கமே மேற்கொள்ளும் போக்கில் தீவிரம் காட்டத் தொடங்கியிருப்பது சமுதாயக் குழப்பத்தையும் தொழில் வாணிபத் தோல்விகளையும் உற்பத்திக் குறைவையுமே உண்டாக்கும். இதை யார் எடுத்துச் சொல்வது? சொன்னுல் உரியவர்கள் காதில் அது ஏறுமா?

——

## எல்லா மாவட்டங்களிலும் இஞ்சினீயரிங் கல்லூரி

மாவட்டங்களில் விவசாயமும் தொழிற் துறையும் சம அளவில் அபிவிருத்தி அடைய வேண்டும், விவசாய முன்னேற்றம் மட்டும் மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியாது. என்று காங்கிரஸ் அக்ராசனர் ஸ்ரீ காமராஜ் தஞ்சை நகராட்சி வரவேற்புக்கு பதிலளிக்கையில் கூறினுர்.

சர்க்கார் சில மாவட்டங்களின் தேவையை உணர்ந்து அவற்றை தொழில் மயமாக்க நடவடிக்கை எடுக்கிறது என்று அவர் கூறினுர்.

ஆதாயம் அளிக்கக் கூடிய திட்டங்கள் மூலம் நகராட்சிகள் தங்களது வருவாயை பெருக்கிக்கொள்ள வேண்டும். இதற்காக மக்களுக்கு அதிக வரி விதிப்பதும் கூடாது. வீடு கட்டும் காலனித் திட்டங்களை நகராட்சி ஏற்று நடத்தலாம். இத்திட்டங்களின் மூலம் வீட்டு வாடகை வருவாய் கிடைக்கும். சர்க்காரும் இதற்கான வழிகளை பரிசீலித்து வருகிறது என்று ஸ்ரீ காமராஜ் கூறினுர்.

ராஜ்யத்தில் உள்ள எல்லா மாவட்டங்களிலும் இஞ்சினீயரிங் கல்லூரி அமைப்பது பற்றி சர்க்கார் பரிசீலித்து வருகிறது என்றும் அவர் தெரிவித்தார்.

தஞ்சை மாவட்ட மக்கள் சார்பாக காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ காமராஜுக்கு 1,31,000 ரூபாய்க்கு பண முடிப்பு அளிக்கப்பட்டது. திலகர் மைதானத்தில் நடந்த ஓர் விழாவில் இப்பண முடிப்பு அவரிடம் கொடுக்கப் பட்டது.

## புதுக்கோட்டை தனி மாவட்டம்

பல பெரிய ஜில்லாக்களை பிரித்து அமைப்பதன் மூலம் பிற்காலத்தில் புதுக்கோட்டையை தனி மாவட்டமாக்குவது முடியும் என்று காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ காமராஜ் புதுக்கோட்டை டவுன் ஹாலில் நடந்த விழாவில் கூறினுர்.

இப்பகுதியில் 10 ஆயிரம் ஏக்கருக்கு தற்போது காவிரி பாசனம் கிடைக்கிறது. இதை விஸ்தரிப்பது பற்றி 4-வது திட்டத்தில் பரிசீலிக்கலாம் என்றும் அவர் தெரிவித்தார்.

சுதந்திரத்திற்கு பின் நாட்டை பல பிரச்னைகள் எதிர்நோக்கியுள்ளன. மக்கள் அனைவருக்கும் சம அளவில் சொத்து விநியோகிப்பதை சர்க்கார் ஏற்றுக்கொண்டுள்ளது. காங்கிரசுக்கு வாக்களிப்பவர்கள் பிற்காலத்தில் சோஷலிச சமுதாயத்தை அடைய முடியும் என்றும் ஸ்ரீ காமராஜ் கூறினுர்.

புதுக்கோட்டையை தனி மாவட்டமாக்க வேண்டும் என்றும் காவிரி பாசனத்தை அப்பகுதியில் மேலும் விஸ்தரிக்க வேண்டும் என்றும் ஸ்ரீ எம். ஏ. முத்தைய செட்டியார் தமது உரையில் கேட்டுக் கொண்டார்.

விழாவுக்கு தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ கிருஷ்ணசாமி நாயுடு தலைமை வகித்தார். ஸ்ரீ காமராஜுக்கு ரூ. 64801-க்கு பணமுடிப்பு அன்பளிப்பாக விழாவில் வழங்கப்பட்டது.

இதற்கு முன்னர் ஸ்ரீ காமராஜ் பெரும் ஊர்வலத்தில் டவுன் ஹாலுக்கு அழைத்து வரப்பட்டார். சுமார் 126 வித்வான்கள் நாகஸ்வர இன்னிசை பொழித்தனர்.

——

# பேரின்ப வாழ்வு

திரு. இ. வே. சோமசுந்தரம், B.A., P & A (DIP)

இராமகிருஷ்ண விஜயம், மாசிகையிலிருந்து மறுபதிப்பு.

## 25. முழுத் தூய்மை அடைய மும்முரமாக முனைதல்

இறைவன் இட்டபணியை இயற்றுவதில் மிகக் கவனமாக இரு. உலகச் சிறு நெறிகளை விட்டு, தூய்மை தரும் உள்ளத் துறவு நிலை நாடுவதை அடிக்கடி நினைவு கூர்ந்து நில். இறை நிலை பெற்று இறைவன் அருட் பணி புரிந்து தூய தெய்வ மனிதனாவதற்கே அல்லவா இந்தப் பணியாற்றும் வாழ்க்கை முறையை ஏற்றுக்கொண்டிருக்கிறாய்?

முன்னேற்றம் அடைவதில் ஆர்வத்தோடு இரு. நீ விரைவிலேயே உனது உண்மை உழைப்புக்காக நல்ல கைம்மாறைப் பெறுவாய். அப்போது துன்பம் தொடரும் என்ற அச்சமே உனக்கு இல்லாது போகும்.

அன்பனே! இப்போது தூய்மைக்காகச் சிறிது சிரமப்படு. அதனால் நீ பேரமைதியைப் பெறுவாய். ஆ! இடையறாத இன்பம் துய்ப்பாய்.

நீ உண்மையான உள்ளத் தூய்மையுடனும் ஆர்வத்துடனும் தொடர்ச்சியாக இருந்துவந்தால் இறைவன் உன்னைக் கைவிடாமல் பெருமிதமாக உனக்குக் கைம்மாறு செய்து அருள்வார்.

தூய்மையில் நிலையாக நின்று தீ நீர்மைகளை அழித்துவெற்றிகொள்வதில் நீ நிலையான நம்பிக்கை பெற்றிரு. ஆனால் அதைப் பற்றி அசட்டையாக இருந்து ஏமாந்துவிடாதே. ஏனெனில் அப்படி ஆர்வமும் அக்கறையும் குறைந்தால் நீ கவனக் குறைவும், கர்வமும் அடைந்து தூய்மையை இழந்துவிடுவாய்.

ஒருக்கால் தூய்மையில் நாட்டமுள்ள ஒருவன் 'முழுத் தூய்மையுடன் இருக்க முடியுமா? வழுக்கித் தீமையில் விழுந்து விடுவோமா?' என்ற ஐயத்திலும், அச்சத்திலும், மனக் கலக்கத்திலும், கவலையிலும் மூழ்கியிருந்தான். தீமைக் கவர்ச்சிகளால் சூழப்பட்டு 'இன்பம் போன்றுளவே, இவற்றைத் துய்த்துக் கழித்து விடுவோமே, பின் நன்மைதீமைகளின் கவர்ச்சி போகுமே' என்று ஒருக்கால் எண்ணுவான். 'இவ்வீன இச்சைகளை நுகர்வதில் என்ன உணர்ச்சி அனுபவம் இருக்கிறது என்று அறியாமையால்தானே ஆசை எழுகிறது. அதையும்தான் துய்த்துக் கழித்து விடுவோமே' என்று உறுதி கொள்வான். தீயில் எண்ணெய்யை விட்டுத் தீயை அணைக்க முயல்வது போன்றது அம்முயற்சி என்பது கீதை வாக்கு என்று அவனது ஞானம் கூறும் 'என்ன தொல்லை! தீமைக் கவர்ச்சி இருக்கிறது! தூய்மை நாட்டம் அவற்றைத் துய்ப்பதிலிருந்து தடுக்கிறது' என்று அலமலருவான். 'ஆஹா! மாமாய இச்சைகளை அனுபவித்தால் எப்படித்தான் இருக்கும் என்று மட்டும் எனக்கு முழுவதும் தெரிந்துவிடக் கூடாதோ?' என்று ஏங்குவான். தனக்குள் தானே நடத்திவந்த இப்போராட்டத்தால் தவித்துக்கொண்டிருந்த அவன் ஒரு நேரம் இப்போராட்டத்தின் முடிவு என்னவாகும் என்று வருந்தினான். ஆ! எனக்கு நான் இத்தீமைக் கவர்ச்சிகளில் சிக்காமல் தூய்மையில் நிலைத்து நிற்பேன்' என்று மட்டும் உறுதியாகத் தெரிந்து இருந்நால்! என்று உருகினான்.

உடனே இறை அருளால் அவனுக்கு அகத்திலே கீழ்க் குறித்த ஒரு முடிந்த கருத்து எழுந்தது. – அது. அப்படியே தூய்மையில் நிலைத்து இருப்பாய் என்று உனக்குத் தெரிந்து இருந்தால் என் செய்வாய்? அப்போது நீ எதைச் செய்வாயோ, எப்படி நடந்துகொள்வாயோ, எப்படி இருப்பாயோ அப்படி இப்போதே இரு. நீ உறுதியாகத் தூய்மையில் நிலைத்து இருப்பாய். அஞ்சாதே!

அந்த அருள் மொழியால் ஆறுதலும் தூய்மைத் திண்மையும் பெற்றான். திடம் பெற்றான். ஆர்வத்துடன் இறைவன் திருவருளின் படியே பணியாற்ற முனைந்தான். அவன் உள்ளத்தில் இருந்த கலக்கமும், குழப்பமும் கவலையும் நீங்கின.

அதன் பிறகு அது எப்படி இருக்கும்? எந்த நுகர்ச்சிகளில் என்ன பழக்கம்! எது எங்ஙனம் முடியும்? என்று துருவித் துருவித் தேடுவதிலும் ஆராய்வதிலும் முனைப்பு அற்றவன் ஆனான். அதற்குப் பதிலாக - தூய சேவைகளுக்கான நற்காரியங்களைத் தொடங்குவதிலும் செய்து முடிப்பதிலும் முனைந்தான். மற்றும் 'இறைவன் திருவுள்ளம் எப்படி உள்ளது? தெளிந்த முடிவான அருள் வழி யாது என ஆராய்ந்து பணி ஆற்றுவதில் ஊக்கமாக இருந்தான்.

'இறை அருளை நம்பி நலம் புரி, நலமே செய். அப்படிச் செய்வதாலே – இறை நிலையிலே நிலைத்திருப்பாய்- அருள் உணவை உண்மையில் உண்டு களிப்பாய்' எனத் தூய்மைப் பெரியார் கூறியுள்ளார்.

வாழ்க்கையைக் கண்டிப்பாகத் தூய்மைப்படுத்துவதில் இருந்தும், ஆன்ம முன்னேற்றத்தில் இருந்தும், பலர் பயந்து பின்வாங்குகின்றனர். அம்முயற்சியில் உள்ள தொல்லைகளும், ஊக்கமாகவும் விடா முயற்சியுடனும் முனைந்திருக்கவேண்டி இருப்பதும் அம்முயற்சியில் உள்ள பெரும் போராட்டமும், அவர்களுக்கு அச்சத்தை உண்டாக்குகின்றன.

ஆயினும் தூய்மையில் தங்கள் முன்னேற்றத்துக்குத் தடையாகவும், துன்பந் தந்து கீழ் இருப்பனவாகவும், எவை எவை உளவோ அவற்றை எவர் மிகப் பெரு முயற்சியால் வென்று முன்னேற முயல்கிறார்களோ, அவர்கள் நற்பண்புகள் அனைத்திலும் சிறப்பாக முன்னேறிச் சீர்திருந்துகிறார்கள்.

ஏனெனில் எப்போது ஒரு மனிதன் தன் தீ நீர்மைகளை மேலும் மேலும் அடக்கி அகற்றிவிடுகிறானோ, தன் மனப்போக்கை மடக்கித் தூய்மையின்பால் திருப்புகிறானோ அப்போது அவன் மேலும் மேலும் சீர்திருந்தி மிகுதியான இறை அருளைப் பெறுகிறான்.

ஆனால் மனிதர் அனைவருக்கும் அப்படி ஒரே அளவுக்கு அதிகமாக அடக்கி வருத்திச் சீர்திருத்தவேண்டிய நிலை இல்லை.

ஒரு மனிதன் மிகக் கொடிய தன்மைகளும் காம வெகுளி மயக்கங்களும் உடையவனாக இருக்கலாம். மற்றவன் மிகக் குறைந்த குற்றங்களுடனும் அமைதியான நிலையுடனும் இருக்கலாம். முன்னவன் தன் தீ நீர்மைகளுடன் தீவிரமாக ஆர்வத்துடன் இடை விடாது போராடி வருபவனாக இருந்து, பின்னவன் அவ்வளவு ஆர்வத்துடன் தன் தீக்குணங்களைக் களைய முயலாது இருப்பவனானால் முன்னைய கொடியவன் மிக விரைவில் பின்னைய நல்லானை விடத் தூய்மைப் பெரியாராக ஆகிவிடுவான்.

நமது சீர்திருத்தத்தை விரைவில் கூட்டுவிப்பதில் மிக உதவி அளிப்பன இரண்டு. அவை — (1) இயற்கையில் நம்மைக் கீழ் இருப்பனவாகிய தீய ஆசைகளில் இருந்து படேர் என்று அறுத்துக்கொண்டு விலகுவது.

(2) நமக்கு மிகத்தேவையான நற்பண்பு நற்பழக்கம் எதுவோ அதை நாடி மிகக் கண்டிப்பான முழு முயற்சியுடன் வழக்கப்படுத்துவது.

மற்றவர்களிடம் எவற்றைக் குறைபாடுகள் என்று கண்டு வெறுக்கிறோமோ அவைகளை நம்மிடம் இல்லாமல் விடா முயற்சியுடன் களைந்துவிடவேண்டும்.

நீ எங்கு இருந்தாலும் உனது உள்ளத் தூய்மைக்கு வேண்டிய பண்புகளை உனது உயிர் நலத்திற்கும் ஆகப் பழகிக்கொள். ஏதாவது ஒரு சீரிய சிந்தனை, சொல் செயலைக் கண்டாலும் கேட்டாலும் உடனே உள்ளக் கிளர்ச்சியுடன் அதைப் பின்பற்றி நலம் அடைய முனை.

ஆனால் கண்டிக்கத்தக்க ஏதாவதொரு தவறைக் காண நேர்ந்தால் அது உன்னிடம் நிகழாவண்ணம் கவனமாகப் பார்த்துக்கொள். அப்படி ஏதாவது குற்றம் குறை செய்துவிட்டால் மிகத் துரிதமாக உன்னைத் திருத்திக்கொள்ளப் பாடுபடு.

உன்னுடைய கண்கள் எப்படி பிறரைக் கவனித்துக்கொண்டே உளவோ அப்படியே மற்றவர்களால் நீயும் கூர்மையாகக் கவனிக்கப்பட்டு வருகிறாய்.

ஆ! ஆர்வமுடனும் இறையன்புடனும் தூய கட்டுப்பாடுகளுடனும் ஒழுக்கமாக உள்ள நல்லோர்களைக் காணல் எவ்வளவு இன்பத்தையும் அமைதியையும் அளிக்கிறது.

அதற்கு மாறாகத் தாங்கள் மேற்கொண்ட உயிர் வாழ்வையும் தொண்டின் ஆர்வத்தையும் விட்டு ஒழுங்கீனமாகவும் தூய கட்டுப்பாடுகளைக் கவனியாமல் தீய பழக்கங்களைக் கைக்கொண்டவராகவும் இருப்பவரைப் பார்த்தால் அந்தோ எவ்வளவு வருத்தத்தையும், கவலையையும் தருகிறது.

ஆ! தாங்கள் எடுத்துக்கொண்ட நல்ல குறிக்கோள் உள்ள தூய பணிகளிலேயே ஈடுபட்டிருப்பதை விட்டு, தங்களுடைய கண்காணிப்பில் விடப்படாத வேலைகளில் மும்மரமாக முனைந்து இருப்பது எவ்வளவு கேட்டையும் துன்பத்தையும் தருகிறது.

உனது வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு இருப்பதை எப்போதும் கருத்தில் வைத்து இரு. மக்கள் நலத்திற்காகத் தன் உடல் பொருள் ஆவி எல்லாம் இந்த அன்புடனும் ஆர்வத்துடனும் அமைதியாக முயன்று தூய்மைப் பெரியார்களின் உதாரணத்தை உள்ளக் கண் முன்னே இடைவிடாது உறுதியாக நினைந்திரு.

அத்தூய்மைப் பெரியார்கள் வாழ்வைப் பார்க்க நீ வெட்கித் தலை குனிந்து கவலைப்பட வேண்டியுளது. ஏனெனில் பல்லாண்டுகள் இந்த இறை பணியில் ஈடுபட்டு இருந்தும் அத்தூய தெய்வீக நிலை அடைவதில் முன்னேற்றமே இல்லாமல் இருக்கிறாயே!

உயிர்த் தூய்மை நாட்டம் உடையவன் ஒருவன் ஆர்வத்துடனும் உண்மையாகவும் தூய்மைப் பெரியார் வாழ்க்கை முறைகளைப் பின்பற்றிவந்தால் தனக்கு வேண்டியனவற்றையும் தனக்கு உண்மை நலம் பயப்பனவற்றையும் தடையின்றிப் பெறுகிறான். அத்தூய்மைப் பெரியார் அருள் முறையைத் தவிர வேறு எதுவுமே அவனுக்குத் தேவை இராது.

ஆ! இறை அருள் நம் உள்ளத்தே புகுந்துவிட்டால் எவ்வளவு விரைவில் நமக்கு அடிப்படை உண்மைகள் அனைத்தும் எளிதில் விளங்கி விடுகின்றன.

ஆர்வமுள்ள அற வாழ்க்கையாளன் தனக்கு நேரும் இடர்ப்பாடுகளைப் பெருமையாகச் சகித்து இட்டபட்ட பணிகளைத் திறமையாக நடத்திச்செல்கிறான். அவைகளில் அழுந்திவிடாமல் அமைதியாகத் துய்த்துக் கழிக்கிறான்.

அற வாழ்வில் முழுப் பற்றும் இல்லாத அசட்டையானவனுக்கோ கவலைமேல் கவலையாக எழுந்து அவனை எல்லாப் பக்கங்களிலும் வருத்தத்தில் ஆழ்த்துகின்றன. ஏனெனில் அவனுக்கு உள்ளத்தின் உள்ளே இருந்து ஆறுதல் கிடைப்பதற்கு உள் ஒளியும் அகத் தூய்மையும் இல்லை. அரைகுறை ஆன்மப்பற்று இருப்பதால் வெளி உலகத்திலிருந்து வசதிகளைத் தேடிக்கொள்ளவும் வகையற்றவனாகிறான். 'ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால்' என்னும் இரங்கத்தக்க இந்நிலையைக் கடந்து விரைந்து செல்.

அற வாழ்க்கையாளன் கண்டிப்பான கட்டுப்பாடுகளுக்கு அடங்கி வாழாவிடில் அவனது உள்ளத் தூய்மைக்கு அளவற்ற கேடுகள் விளைவதற்கு இடம் ஏற்படுகிறது. எவன் ஒருவன் எளிதில் தன் விருப்பப்படி இருப்பதையும், வசதியாக வாழ்வதையும் விரும்பித் தேடுகிறானோ அவன் எப்பொழுதும் சஞ்சலத்திலேயே சங்கடப்படுவான். ஏனெனில் ஏதாவது ஒன்று அவனது இச்சைப்படி இன்றி அவனுக்கு வெறுப்பைத் தந்துகொண்டே இருக்கும்.

உள்ளத் தூய்மையையே தேடும் ஆன்ம வாழ்க்கையாளர் மறைவாக உலகியலில் இருந்து பிரிந்து தனித்து வாழ்வது எப்படி?

அவர்கள் வெகு அரிதாக வெளியே செல்கின்றனர். உலககாரியங்களிலும் பழக்க வழக்கங்களிலும் ஈடுபடாது இருக்கின்றனர். மிக எளிய உணவு உடைகளுடன் வாழ்கிறார்கள். உடலையும் மனத்தையும் கசக்கி வேலை வாங்குகிறார்கள். பேச்சை அடக்குகின்றார்கள். அதிகாலையில் எழுகின்றனர். நீண்ட நேரம் கடவுள் நினைவில் ஆழ்ந்துவிடுகின்றார்கள். அடிக்கடி நல்ல நூல்களைப் படிக்கிறார்கள். தங்களைக் கட்டுப்பாடுகளுடன் ஒழுங்கு செய்துகொள்ளுகிறார்கள். தங்கள் நடத்தையைத் தாங்களே ஒற்றர்கள் போல் இடைவிடாது கண்காணித்துத் தூய்மையினின்றும் வழுவாது காத்துக்கொள்ளுகிறார்கள்.

[ 7-ம் பக்கம் பார்க்க ]

# எழுத்துச் சிந்தனைகள்

— புலவர் முத்து. வேங்கடேசன்

*பத்திரிகை வாசகர்களில் சிலருக்கு எழுத்தாளராகி விடவேண்டும் என்ற ஆசைபிறக்கிறது. தாங்கள் எழுதுவதெல்லாம் இலக்கியச் சுடர்கள் என்ற மயக்கமும் ஏற்பட்டுவிடுகிறது. அவை மதிக்கப்படுவதில்லை என்ற ஏமாற்றமும் உண்டாகிறது. உடனே எழுத்துத் துறையில் நேர்மையும் நீதியும் இல்லை என்று கருதத் தொடங்கி விடுகிறார்கள். திகைப்பூண்டு மிதித்தவர் போன்ற எழுத்தாளர்களின் சிந்தனைகள் எப்படியிருக்கும் என்பதற்கு இந்தக் கட்டுரை ஒரு உதாரணமாக இருப்பதால் அப்படியே இதை வெளியிட்டிருக்கிறோம். —ஆசிரியர்.*

'எழுதுகோல் தெய்வம்- இந்த எழுத்தும் தெய்வம்!' என்றான் மகாகவி பாரதி.

'வாள்முனை செய்யாததை எழுதுகோல்முனை செய்யும்' என்று எழுத்தாளர்களின் பெருமையைப் பேசுவதுண்டு.

பாரதி வாழ்ந்த தமிழ் மண்ணில் 'எழுத்தாளன்' என்று பெயர் பெற்று வாழ்வது பெறலரும் இன்பமாகும்.

எழுத்துத் துறையில் ஒரு புதிய எழுச்சியைத்தோற்றுவித்த கவிப்பெருமகன் பாரதி, தமிழுக்காக உழைத்தான். எழுத்தைத் தெய்வமாகப் போற்றினான். உள்ளொளி பரப்பும் திருக்கோயிலாக எழுத்தாளன் விளங்கவேண்டும் என்று எண்ணினான். எழுத்து, எச்செயலையும் இனிது முடிக்கும் என்பதனை நிலை நாட்டிச் சென்றான்.

பாரதி பாதையில் செல்ல விழையும் நாம் இன்றைய தமிழ் எழுத்துத் துறை பற்றிச் சிந்திக்க வேண்டியவர்களாக இருக்கின்றோம்.

தமிழிலே கதை, கட்டுரை, கவிதைகளை எழுதிப் புகழ்பெற்று, அந்த வளர்த்த தமிழையே குறைகூறித் திரியும் எழுத்தாளர்களைப் பார்க்கும் போது 'நெஞ்சு பொறுக்குதில்லையே!'

இன்று நல்ல தமிழை வளர்ப்பது எழுத்தாளர்களின் தலைசிறந்த கடமையாகும். இனியும் அம்மாமி நடையிலேயே எழுதிடின், அது தமிழுக்குச் செய்யும் இழுக்கு என்றே எண்ணத் தோன்றும்.

மு. வரதராசனார் நல்ல தமிழில் புதினங்களை எழுதவில்லையா? நா. பார்த்தசாரதி என்ற மணிவண்ணன் கவிதைத் தமிழைப் புதினத்துறையில் புகுத்தவில்லையா? அவர்களுடைய நூல்கள் எல்லாம் இலக்கியச் சந்தையில் வேண்டாதன என்று ஒதுக்கப் பெற்றன? எழுத்தாளர் உலகம் சிந்திக்கவேண்டுகின்றேன்.

எழுத்துத் துறையில் தூய தமிழ் நடையைத் துணிந்து புகுத்தியவர் திரு. வி. க. ஆவர். திரு. வி. க. வின் எழுத்திற்காக நாம் அவரைப் பாராட்டவில்லையா?

இந்த நேரத்தில் ஒரு பிரபலக் கவிஞர் கூறிய கருத்தொன்று நினைவுக்கு வருகிறது. 'பேசுவது போல் எழுதவேண்டும்!' என்பது அவர் கொள்கை. பேசுவது போல் எழுதுவது என்றால், 'நன்றாகப் பேசவேண்டும், அதனையே நன்றாக எழுதவேண்டும்' என்று அவரே விளக்கம் கூறுகிறார். நல்ல கருத்து. பேச்சு, எழுத்துத் துறைகளில் ஈடுபட்டவர்கள் அவர் கருத்தை ஆதரிக்கத் தயங்கக்கூடாது.

நன்றாக எழுதுவது என்பது என்ன? நல்ல தமிழில் எழுதுவது தானே!

காலம் மாறுகிறது. இளைஞர்கள்-வருங்கால மன்னர்கள் நல்ல தமிழ் நடையினையே இன்று விரும்புகின்றார்கள். தூய தமிழ்க் கவிதைகளையும் கட்டுரைகளையும் சுவைக்க வேண்டும் என்ற பேருணர்ச்சி இன்று எல்லா இளைஞர்களிடமும் முகிழ்ந்திருப்பதைக் காணுகின்றோம்.

'எனக்காக எழுதுகிறேன்!' என்ற எண்ணம் மிகவும் கீழானதாகும். சமுதாய வாழ்வைச் செம்மை செய்யக் கூடிய வகையில் எழுதுவோன்தான் உண்மையான எழுத்தாளன்.

திருவள்ளுவர் ஒரு நூல்தான் எழுதினார். அது உலகப் புகழ் பெறவில்லையா? காரணம்-அது சமுதாய இலக்கியமாக மிளிர்கின்றது.

'சமுதாய இலக்கியம் சமைக்கின்றேன்!' என்று கூறி, சமுதாயத்தின் குறைகளையே கூறக்கூடாது. சமுதாயத்தின் குறைகள் எவ்வாறு தீர்க்கப்படவேண்டும்? என்ற வினாவிற்கு எழுதும் எழுத்தில் விடைகாண வேண்டும்.

தமிழ் எழுத்தாளர்கள் என்று சொல்பவர்கள் சில சமயம் சமுதாயத்தையும், உயிர்ப்போடு விளங்கச் செய்யும் மொழியையும் மறந்து விடுகிறார்கள்.

நல்ல தமிழ் விரும்புவோர் பெருகியுள்ள இற்றை நாளிலும், சில எழுத்தாளர்கள் பத்திரிகை நிருவாகத்தினருக்குப் பயந்து கொண்டு, உயிரில்லாத தமிழிலேயே எழுதுகின்றனர்.

'நல்ல தமிழ்!' என்றால், 'புலவர் தமிழா!' என்று சிலர் கேட்பார்கள். நல்ல தமிழ் என்பது புலவர் தமிழ் இல்லை என்றாலும், புலவரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய புரியும் தமிழ். புரியும் தமிழ் என்றால் கொச்சைத் தமிழன்று. எளிய தமிழ்; இனிய தமிழ்.

பத்திரிகைகள் இன்று ஏராளம். வாங்குவோரின் தரத்திற்கேற்ப பத்திரிகைகளின் தரமும் மாறுவதைக் காணுகின்றோம். ஒவ்வொரு பத்திரிகையும் ஒவ்வொரு விதத்தில் தன்னை வளர்த்து வருகின்றது. செல்வமும் செல்வாக்கும் உள்ளவர்களிடம் போய் பத்திரிகைத் தொழில் சரண் புகுந்து விட்டது. அவர்களுக்குத் தமிழ் வளரவேண்டும் என்பது பற்றியோ, தமிழ் எழுத்தாளனைப் பற்றியோ அவ்வளவாக அக்கறை கிடையாது. பத்திரிகையில் பணிபுரியும் எழுத்தாளன் அவர்களைச் சுய உரிமைக்காக எதிர்த்து விட்டாலோ, உடனே 'வெளியே போ!' என்ற சொற்களைத்தான் அவன் கேட்க முடியும். எழுத்தாளனுக்கு இன்று பலத்தபாதுகாப்புதேவைப் படுகிறது.

'எழுத்தாளன்-ஒரு மிகச் சிறந்த சமுதாய ஊழியன்' என்பதை மனத்திற் கொண்டு, மற்ற அரசியல் பணியாளர்களுக்குரிய மதிப்பையும், பொருளாதார நிலையையும் அவனுக்கும் கொடுக்க அரசாங்கம் தயங்கக் கூடாது. எழுத்தாளர்களும் அரசின் வளர்ச்சிக்குத் தேவையான கருத்துக்களையும் வழிமுறைகளையும் சொல்லி, தேசீயச் சிந்தனையுடன் விளங்க வேண்டும்.

எழுத்துத்துறை ஒரு சிலரின் சொந்தத் துறைபோல இன்று ஆகிவிட்டது. இதை மறைத்துப் பயனில்லை. எழுத்துத்துறை நேர்மையான துறை என்று எண்ணிக் கொண்டிருந்த காலம் மலையேறிவிட்டது. எவ்வளவு நல்ல எழுத்தாக இருந்தாலும் குறிப்பிட்டவர்கள் மதிப்பிட்டால்தான், அது வெளியாகும். அந்தக் குறிப்பிட்டவர்கள் புறக்கணித்தால் உண்மை எழுத்தும் குடத்துள் விளக்காக இருக்கவேண்டியது தான்.

எழுத்தாளனின் உயிர் — எழுத்து. உயிரையே எழுத்தாக்கிப் பத்திரிகைகளுக்கு அனுப்புகிறான் எழுத்தாளன். அதனைப் பத்திரிகைக்காரர்கள் கண்ணெடுத்துப் பார்ப்பதுமில்லை. காரணம் – அவன் 'விளம்பரம்', 'சிபாரிசு' என்ற முத்திரைகள் இல்லாத எழுத்தாளன்.

மற்ற துறைகளில்தான் 'சிபாரிசு' என்ற பேய்ச் சக்தி கூத்திடுகின்றது. 'எழுத்துத் துறையிலுமா சிபாரிசு?

பாரதிபோன்ற உண்மையான எழுத்தாளர்கள் வாழ்ந்த நாட்டில் எழுத்துத் துறையின் இழிநிலையைக் காணுங்கள்.

சிறுகதைத் துறையில் பேர்பெற்று விளங்கும் திரு. ஜெயகாந்தன் அவர்களின் நூலை ஒருவரும் படிக்காத காலம் ஒன்றிருந்தது. காலம் மாறியது. பெரியவர்கள் 'சிபாரிசு' செய்து பாராட்டினார்கள். அவருக்கும் எழுத்துத்துறையில் ஒரு நம்பிக்கை ஏற்பட்டது. இன்று சிறுகதை மன்னராக விளங்குகிறார்ஜெயகாந்தன்.

இதை எதற்குச் சொல்கின்றேன் என்றால் எவ்வளவு உயர்ந்த எழுத்தாளனாக இருந்தாலும் 'சிபாரிசு' இருந்தால்தான் இன்று முன்னேற முடியும் என்பதனைக் காட்டத்தான். எழுத்துத் துறையில் 'சிபாரிசு' என்ற நிலை மாறவேண்டும். உண்மையான எழுத்தை யார் எழுதினாலும் பாராட்டி வெளியிடும் பரந்த மனம் வேண்டும்.

பத்திரிகை எழுத்தாளனைத் தேடவேண்டுமேயல்லாது, எழுத்தாளன் பத்திரிகையைத் தேடக் கூடாது. 'யார் எழுதுகிறார்?' என்று ஆராயாமல், 'என்ன எழுதுகிறார்?' என்று ஆராய்ந்து, எழுத்தை வெளியிட வேண்டும். தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்ய வேண்டு'மாகில், எழுத்தாளனின் தலைவிதியை ஒரு சிலர்தான் நிர்ணயிக்கவேண்டும் என்ற நிலையை மாற்றி, உண்மை எழுத்தை மதித்து வெளியிட வேண்டும்.

இன்று பாரதியிருந்தால் 'எழுதுகோல் திருட்டு-இந்த எழுத்தும் திருட்டு' என்று கூறி எக்களிப்பான்! உள்ளம் குமைவான்.

'உள்ளொளி' பரப்ப வேண்டிய எழுத்தாளன் வழக்கு மன்றம் ஏறும் காட்சியைக் காணுகின்றோம். எழுதுபவன் ஒருவன். அந்த எழுத்தால் பிழைப்பவன் மற்றொருவன் இந்த இழிநிலை மாறாதா?

விடுதலைப் பறவையாகத் திரியவேண்டிய எழுத்தாளன் கூண்டுக்கிளியாக மாறும் நிலையை மாற்ற வேண்டாமா?

எழுத்துத் துறையைத் தூய்மை செய்யும் பணியை எழுத்தாளர் சங்கங்கள் தாம் நிறைவேற்ற முடியும்.

மாநாடுகள், தீர்மானங்கள், மலர்வெளியீடுகள் — தேவைதான். ஆனால் அவற்றோடு எழுத்தாளர் சங்கங்கள் நின்று விடாமல், எழுத்தின் வளர்ச்சிக்கும், எழுத்தாளன் உயர்வுக்கும் தேவையான உருப்படியான செய்திகளைச் செயற்படுத்தும் 'ஆய்வகங்களாக' மாறவேண்டும். இது ஆணையில்லை. அன்பான வேண்டுகோள்.

மற்ற சங்கங்களுக்கும் எழுத்தாளர் சங்கங்களுக்கும் வேறுபாடுண்டு. 'எழுத்தாளர் சங்கம்' என்பது சமுதாயத்தின் குரலை எதிரொலிக்கும் இதயங்களின் சங்கமாகும். இச்சங்கத்தின் சந்தா – அறம். எழுத்துத் துறையில் அறத்தை நிலைநாட்டுவதே இச்சங்கத்தின் கடமை. ஆபாச எழுத்து, திடீர் எழுத்துத் திருட்டு, எழுத்தாளர்களைப் புறக்கணித்தல், எழுத்துத்துறையில் சிபாரிசு போன்றவற்றைப் பூண்டோடு ஒழித்துக்கட்டி, உண்மையான — அறவழிப்பட்ட துறையாக எழுத்துத் துறையை அமைப்பதே இச்சங்கத்தின் நோக்கம்.

நோக்கம் நிறைவேறின் 'எழுதுகோல் தெய்வமாக வேண்டும்! எழுத்து தெய்வமாகவேண்டும்' என்ற பாரதிவழி வென்றதாகப் பொருள்.

——

## மொழியும் மயிலும்

— பரதேசி —

நமது நாட்டில் சங்கிலித் தொடர்போல் ஏதாவதொரு பிரச்னைபற்றிய விவாதம் நீடித்து உயிர் வாழ்கிறதென்றால் அது தேசிய மொழிப் பிரச்னைதான். நான் அதனுட் புகுந்து என்னையும் பிரச்னைக்குரியவனாக ஆக்கிக்கொள்ள விரும்பவில்லை. ஆனால் ஆசைக்காகவும் அழகுக்காகவுமே ஒரு மொழியை அந்த அந்தஸ்துக் கொடுத்து வைத்துக் கொள்வதானால் இந்த பிரச்னை விவாத அரங்கில் உயிர் வாழவேண்டியிராதே!—மயிலை நம் தேசியப் பறவையாக ஒப்புக்கொண்டுள்ளோம். மயிலைப் பொருட்காட்சிப் பொருளாகத்தான் காணவேண்டியிருக்கிறது. ஜனநாயக மரபுப்படி அதிகம் தென்படும் பறவையை நாம் அங்கீகரிப்பதானால் காக்கையைத்தான் ஏற்க நேரிடும். காக்கையோ மொழிப் பிரச்னையில் தலையிட்டு இன்னும் 'கா'வன்னாவுக்கு மேல் கற்றுக்கொள்ளவில்லை. இது நிற்க—

வடக்கே ஒரு சிலர் நம் பண்டைய மொழிகளுள் ஒன்றும், வேண்டிய கலை விஞ்ஞானச் சொற்களடங்கியதுமான சம்ஸ்கிருதத்தை ஏன் ராஷ்ட்ர பாஷையாகக் கொள்ளக்கூடாது? அதன்மூலம் இந்தி எதிர்ப்பைச் சமாளித்துவிடலாமே என்று குரல் கொடுக்கத் தொடங்கியுள்ளார்கள். என்னைக் கேளாவிட்டாலும் இது விஷயமாக அடியேனின் கருத்தைச் சொல்லியே தீர வேண்டியிருக்கிறது. சம்ஸ்கிருத மொழியை இன்றை நாகரீகப் பண்பில் செத்த மொழி என்கிறவர்களும் இந்த 'ராஷ்டிர பாஷை' அந்தஸ்தை எதிர்க்கமாட்டார்கள். மொழிகளை உபயோகிப்பதில்தான் தகராறே தவிர — உபயோகிக்காமல் ஒரு சில பொன்னெழுத்துக்களையும் – பொன்மொழிகளையும் கௌரவ அந்தஸ்துக்காகப் பாதுகாத்து வைப்பதில் யாருக்கு ஆட்சேபமிருக்கமுடியும்? —நீங்கள் எந்த மொழி வேண்டுமானாலும் பேசிக்கொள்ளுங்கள். எழுதிக்கொள்ளுங்கள் 'பாரதம்' என்ற பெயருள்ள இந்த இந்தியா அல்லது ஹிந்துஸ்தானத்திற்கு 'ராஷ்ட்ர பாஷை' அந்தஸ்துள்ள அதே பெயரில் வழங்கப்படும் மொழி சம்ஸ்கிருதம்தான் என்று சொல்லிவிடலாம். சர்க்காரின் மும்மொழிக் கொள்கையை நான் எதிர்க்கவில்லை. 'ராஷ்ட்ர பாஷா' பிரச்னையில் மண்டை உடைபடுவதைத் தவிர்க்கவே சொல்கிறேன்!

சம்ஸ்கிருதம் அந்த அந்தஸ்தைப் பெறுவதில் வட நாட்டிலோ தென்னாட்டிலோ ஆட்சேபம் இருக்க முடியாதே! — மொழிப் பிரச்னையை மறந்துவிட்டு அமைதியாக அன்றாட அலுவலில் ஈடுபடலாமே!

இன்று மயிலும்–காகமும்–நடுவீதியில் மோதிக்கொள்ளவில்லையே! — நமக்குப் பழக்கப்பட்ட காக்கை தானே நம்மோடு உறவாடிக்கொண்டிருக்கிறது.




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஏடு 30 | 25—7—1965 | வாரம் 35

# செட்டி நாட்டரசர்

செயற்கருஞ் செயல்கள், ஆற்றரும் நல்லறங்கள், பெறற்கரும் பெரும்புகழ் இவற்றல் அன்னிய ஆட்சியாளரும் அரச விருதளித்துப் போற்றிய பெருந்தகை செட்டி நாட்டரசர் ராஜா சர். அண்ணுமலைச் செட்டியார் அவர்கள். தமிழ்ப் பல்கலைக் கழகம் இன்று சிதம்பரத்தில் அமைந்து தமிழ் இனத்துக்கே பெருஞ் சிறப்பைத் தந்துதவுகிறதென்றல் அஃதொன்றே செட்டிநாட்டரசர் குலத்துக்கு நிலைத்த புகழ் நாட்டுகிறது. தமிழிசை இயக்கமும் அதனல் விளைந்த புதிய எழுச்சியும் செட்டிநாட்டரசர் குலத்திற்கு மங்காத புகழ் ஆகும்.

தந்தையின் வழியே குலத் தோன்றலான ராஜா சர். முத்தைய செட்டியார் அவர்கள் நமது நாட்டின் அரசியல், சமயம், சமூகம், தொழில், வாணிபம் போன்ற துறை தொறும் அயராது பணிபுரிந்து பெரும்புகழ் ஈட்டியுள்ளார். அவர்தம் மணி விழா 2—8—65-ல் சிறப்பாக நடைபெறுவதை அறிந்து பெருமகிழ்வு எய்துகிறேம்.

காலத்துக்கேற்ற சிந்தனைகள், எதிர்காலம்பற்றிய தெளிந்த எண்ணங்கள், மக்கள் நலனை மதித்துச் செயல்படும் பாங்கு, இன்முகமும், இன்னுரையும் நயந்து யாவரையும் தம்பால் ஈர்த்துக்கொள்ளும் சிறப்பியல்பு இவற்றல் தந்தைக்குப்பின் தாமே என்ற தகுதியை நிலைநாட்டிக் கொண்டவர் ராஜா சர். முத்தையா அவர்கள்.

மரபு வழுவாமல் காக்கும் மாண்புடன் புதுமைகளை வரவேற்றுப் போற்றும் அவருடைய இயல்பு, விருந்தோம்பும் பரிவு, நாடிவந்தார்க்கு நலம்கூறிப் பயன் உதவிப் பாராட்டும் பண்பு, சோம்பரற்ற உழைப்பு, தெளிந்த சிந்தனை ஆகியவற்றல் தமிழகத் தலைவர்களில் ஒருவராக விளங்கும் ராஜா சர். அவர்களின் மணி விழா அனைவருக்கும் மகிழ்ச்சிதரும் திருவிழா. அவரும் அவரது மரபும் நெடிய புகழ்—நிலைத்த திரு இரண்டும் பெற்றுப் புகழ் வீசப் பல்லாண்டு கூறுகிறேம்.

# நெரூர் கும்பாபிஷேகம்

கரூரை அடுந்த நெரூரில் ஸ்ரீ சதாசிவப்பிரம்மேந்திராள் மஹா சமாதிக்கு எதிரேயுள்ள ஒரு கோயிலுக்கு ஜூலை 1-ந் தேதி கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளது. அதுபற்றிய விளம்பரப்பத்திரிகையில் 'ஸ்ரீ சதாசிவப் பிரஹ்மேந்திராள் ஆலய ஜீர்ணோத்தாரண அஷ்ட பந்தன மஹா கும்பாபிஷேகப் பத்திரிகை' என்று அச்சிட்டிருக்கிறர்கள். ஆனல் அதற்குக் கீழேயுள்ள வரிகளில் 'நெரூரில் ஜீவ சமாதி பெற்ற ஸ்ரீ சதாசிவப் பிரஹ்மேந்திராள் மஹாசந்நிதி முன்புள்ள ஸ்ரீ விசாலாக்ஷீ சமேத ஸ்ரீ விஸ்வநாத சுவாமி கோயில் புதுப்பிக்கப்பெற்று ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீட மஹாசந்நிதானம் ஜகத்குரு ஸ்ரீமத் அவிாவ வித்யாதீர்த்த சங்கராச்சார்ய சுவாமிகள் முன்னிலையில் நடக்கவிருக்கும் அஷ்டபந்தன மஹாகும்பாபிஷேக அழைப்பிதழ் என்று விளக்கம் போட்டிருக்கிறர்கள்.

இந்தப் பத்திரிகையில் ஸ்ரீ சதாசிவப் பிரம்மேந்திராள் வரலாற்றையும் எதற்காகவோ மாற்றிப் போட்டு, சிருங்கேரி சாரதா பீடத்திற்கு இதில் ஏதோ அடிப்படையான தொடர்பு இருப்பது போலவும் காட்ட முயற்சிக்கப்பட்டிருக்கிறது.

முதலில் நெரூரில் நடைபெற்ற கும்பாபிஷேகம் ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திராள் சமாதிக்கு அல்ல. இரண்டாவது அவர்களுடைய வரலாறும் அந்தப்பத்திரிகையில் விளக்கியிருப்பது சரியல்ல.

தஞ்சை திருவிசநல்லூரில் பிறந்து ஸ்ரீ காமகோடி பீடத்து 57-வது பீடாதிபதிகளான ஸ்ரீ பரமசிவேந்திர சரஸ்வதிகளிடம் பிரம்ம வித்தையை உபதேசிக்கப் பெற்றுப் பின்னர் தமது அபூர்வ ஞானப்பிரகாசத்தினல் பிரம்ம சமாதியை அடைந்தவர் நெரூர் சதாசிவப்ரம்மம் என்பதுதான் இதுகாறும் உலகம் அறிந்துள்ள செய்தி. ஆனல் இந்தப் பத்திரிகையிலோ மதுரையில் 300 வருடங்களுக்கு முன் வாழ்ந்த சோமதேவ அவதானிக்கும் பார்வதி தேவிக்கும் புதல்வராய்ப் பிறந்த ஸ்ரீ சிவராம கிருஷ்ணன் மைசூர் சமஸ்தான வித்வானக இருந்த ஸ்ரீ பரமசிவேந்திரரிடம் தீக்ஷைபெற்று சதாசிவம் என்ற பெயருடன் நெரூரில் வாழ்ந்ததாக இந்தப் பத்திரிகை பிரகடனம் செய்தது புதுமையாக இருக்கிறது.

செய்தித் தலைப்பை ஒன்றகப் போட்டு, உள்ளே செய்தியை வேறு விதமாகப் பிரசுரிக்கும் மஞ்சள் பத்திரிகையின் வழியை சமய ஆன்மீகத் துறைகளிலும் சிலர் பின்பற்றத் தொடங்கியிருப்பது துரதிர்ஷ்டமாகும்.

# கண்ணோட்டம்

— ரா. நா.

கோவா விஷயத்தில் காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு அவசரப்பட்டு தீர்மானம் செய்திருக்க வேண்டாம் என்றே தோன்றுகிறது. அந்தத் தீர்மானத்தின் விளைவாக இப்போது மைசூரில் ஏற்பட்டுள்ள நிலைமையைக் கவனித்தால் கிணறு வெட்ட பூதம் கிளம்பிய கதையாகத்தானிருக்கிறது. கோவா மக்கள் பார்லிமெண்டரி ஜனநாயக முறைகளில் பழக்கப்பட்டவர்களல்ல. அதனல்தான் பண்டித ஜவஹர்லால் நேரு கோவா தனித்திலங்க வேண்டுமா ஏதாவது ஒரு ராஜ்யத்தில் இணைக்கப்பட வேண்டுமா என்பதைப் பத்து ஆண்டுகளுக்குப் பின் நிர்ணயித்துக்கொள்ளலாம் என்று கூறினர்.

கோவா தங்கள் ராஜ்யத்தில்தான் இணையவேண்டும் என மைசூர், மகாராஷ்டிரம் இரண்டும் கோருகின்றன. அப்படி இருக்கையில் கோவா தனித்திருக்க வேண்டுமா அல்லது மகாராஷ்டிரத்தில் இணைய வேண்டுமா என்பதை இந்த ஆண்டிக்குள் தேர்தல் நடத்தித் தெரிந்துகொள்ள வேண்டும் என்று தீர்மானம் செய்வது எப்படி நியாயமாகும்? இவ்விஷயத்தில் மைசூர் தலைவர்களைக் கலந்துகொள்ளாமல், மகாராஷ்டிரத் தலைவர்களை, கோவா முதல்வர், இவர்களைமட்டும் கலந்து முடிவு செய்தது நியாயம் எனக் கூறுவதற்கில்லை. இதன் விளைவாக மைசூர் மந்திரி சபை ராஜிநாமாச் செய்வதாகத் தெரிவித்தவுடன் 'மைசூரில் கோவா சேருவதா' என்றும் தேர்தல் பிரச்னையாகக் கிளப்பலாம் என நம் பிரதமர் கூறுகிறர். அப்படியானல் தீர்மானத்தில் மைசூரை ஏன் குறிப்பிடவில்லை என்று கேட்டால் அது நியாயம்தான்.

நிற்க, கோவா மக்கள் என்று சிலர் இருக்கிறர்கள், அவர்கள் கருத்துக்குத்தான் முதலிடம் என்பதை மைசூரோ, மகாராஷ்டிரமோ மதித்ததாகத் தெரியவில்லை. இந்தியா பூராவும் ஒரு நாடு என்றல் ஏதோ தனி ராஜ்யமாக அமைந்திருப்பதுபோல் மைசூரும் மகாராஷ்டிரமும் மண்ணசைபிடித்து கோவா எங்களுடையது என்று மார்தட்டுவதில் என்ன அர்த்தம்? கோவாவின் முதல்வர் அதை மகாராஷ்டிரத்தில் சேர்க்கவேண்டும என்றுகூறி பிரசாரம் செய்வது அவருக்கு இருக்க வேண்டிய பாரபட்சமின்மையைக்காட்டவில்லை. காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டும் மத்திய அரசும் இவ்விஷயத்தில் மக்கள் மனதில் பதட்டமோ குழப்பமோ ஏற்படாமல் பார்த்துக் கொள்ளவேண்டும்.

° ° °

கோவாவைப்பற்றிப் பேசுகையில் இது சம்பந்தமாக நம் இந்திய அரசின் கோவா நடவடிக்கையைக் கண்டித்த ஐ. நா. வின் அமெரிக்க பிரதிநிதியான திரு. அட்லாய்ன்டிவன்ஸன் திடீரென லண்டனில் மாரடைப்பினல் காலமானது ஞாபகத்திற்கு வருகிறது. நம் விஷயத்தில் அவர் திறமை வாய்ந்த ராஜதந்திரி, பேச்சில் வல்லவர். அவர் இலினய் கவர்னராயிருந்தவர் இருமுறை ஜனநாயகக்கட்சி அபேட்சகராக நின்று ஜனதிபதி தேர்தலில் தோற்றவர். அவர் தோல்வியுற்றதற்கு முக்கிய காரணம் அவர் தம் மனைவியை விவாகரத்து செய்ததுதான் என்று அக்காலத்தில் நிருபர்கள் கூறினர். அவர் தேர்தல் பிரசாரம் செய்கையில் எதிர்க்கட்சியான குடியரசுக் கட்சியைப்பற்றி வருமாறு கூறியது சரித்திரப்பிரசித்திபெற்றது.

'எங்களைப்பற்றிகுடியரசுக் கட்சி பொய்ப்பிரசாரம் செய்வதை நிறுத்துமானல் அவர்களைப்பற்றிய உண்மைகளை நாங்கள் சொல்லாமல் நிறுத்திக் கொள்கிறேம்'.

° ° °

ஹெல்ஸிங்கியில் உலக சமாதான வாதிகள் மகாநாடு நடந்தது.

அதற்கு இந்தியாவின் பிரதிநிதிகளாகச் சென்றவர்களின் தலைவரான மாஜி மத்ய மந்திரி திரு. கே. டி. மாளவியா முறைதவறி அமெரிக்காவின் வியட்நாம் தலையீட்டை 'மிருகத்தனமானது' என்று பேசியிருக்கின்றர். சமாதானவாதிகள் அமைதிக்கு வழிதேட வேண்டுமேயொழிய பகைமை உணர்ச்சியைப் பெருக்கும் முறையில் பேசலாகாது மேலும் இவருடைய பேச்சு நம் அரசாங்கத்தின் பிறநாட்டுறவை பாதிக்கும் என்பதையும் பற்றி அவர் சிந்தித்ததாகத் தெரியவில்லை. இதுமட்டுமல்ல. அந்த மகாநாட்டிற்குச் சென்றவர்களே தங்களுக்குள் ஒருவரையொருவர் கூச்சல் போட்டுத் திட்டிக் கொண்டனராம். இவர்கள் சமாதானவாதிகளாம்!

கடைசியாக இந்தப் பயனற்ற மகாநாட்டிற்கு நம் அரசாங்கம் இந்தியாவிலிருந்து 100 பேர் செல்ல அனுமதித்துள்ளது. அன்னியச் செலாவணி நெருக்கடி காலத்தில் 100 வீரர்கள் பிறநாடு செல்ல அனுமதிப்பானேன்?

## மும்முறை செத்துப் பிழைத்த பெண்

மூன்று தடவை இறந்து யமனுடன் போராடி வென்று உயிர்பெற்றஒருபெண்ணின் பலம் குறித்து கிளாஸ்கோ நகரில் டாக்டர்கள் அதிசயிக்கின்றனர். அப் பெண்ணின் பெயரை வெளியிட அவர்கள் மறுத்துவிட்டனர். எனினும் அவர்கள் அப்பெண் செத்துப் பிழைத்த விவரத்தைத் தெரிவித்தனர்.

அப்பெண்ணுக்கு ஸ்தல ஆஸ்பத்திரியில் ஒரு குழந்தை பிறந்த போதுதான் இது நிகழ்ந்தது. பிறகு பிரசவத்துக்குப் பிறகு அவளுடைய உடல் நிலை மோசமாகி இருதயத் துடிப்பு நின்றுவிட்டது. இது முதல் மரணமாகும், டாக்டர்கள் உடனே அவருடைய மார்பைக் கிழித்து இருதயத்தை கையினல் பிசைந்துவிட்டு அதை மீண்டும் தானுக இயங்கும்படி செய்தனர். ஆனல், அவளுடைய நிலைமை மீண்டும் மோசமாகி பழையபடி இருதயம் நின்று விட்டது. இது இரண்டாவது மரணமாகும். டாக்டர்கள் விடவில்லை. அவர்கள் பழையபடி இருதயத்தைப் பிசைந்துவிட்டு மீண்டும் அது இயங்கும்படி செய்தனர். அதில் அவர்கள் வெற்றி பெற்றனர். ஆனல் நம்பமுடியாத வகையில் அவளுடைய இருதயத் துடிப்பு மறுபடியும் நின்றுவிட்டது. அது மூன்றுவது மரணமாகும்.

அதைவிட நம்பமுடியாத வகையில் டாக்டர் விடாப்பிடியாக அவளுடைய இருதயம் மீண்டும் செயல்படும்படி செய்தார். உயிர்வாழ அபாரமான உறுதிகொண்ட அவள் அதற்குப் பிறகு உயிர் பெற்று விட்டாள்.

அவளை டாக்டர்கள் மிக ஜாக்கிரதையாக கவனித்து வருகின்றனர். அவள் நாலாவது தடவை இறந்துவிடக் கூடாதே என்பது அவர்களுடைய கவலையாகும்.

—நேபன்.

## ரூ. 1 கோடி கொள்ளை

நியூயார்க்கில் இருபது வயதுக்குட்பட்ட அலுவலகப்பணியாள் ஒருவனிடமிருந்து சுமார் ஒரு கோடி ரூபாய் பெறுமான பங்குபத்திரங்களை இருவர் கொள்ளையடித்தனர். பங்கு பத்திரங்களை வாங்கி விற்கும் கம்பெனியொன்றின் பணியாள் அவன். தெருவில் அவன் நடந்து செல்கையில் இருவர் திடீரென துப்பாக்கியைக் காட்டி அவனை வழிமறித்து மிரட்டி அங்கேயே 5 நிமிடங்கள் தங்கியிருக்க உத்தரவிட்டுவிட்டு, பங்குபத்திரங்களைச் சுருட்டிக்கொண்டு கொள்ளையர் ஓடினர்.

மூன்றும் பாகம் ]

[ பள்ளி முதல் வீடு

# உத்தமன் முத்து

திருச்சி பாரதன்

### 33. குருட்டுச் சிறுவன்

பாலு ஒருபுறமும் — உத்திரா
பதிதான் ஒருபுறமும்
'ஜாலி'யாய் முத்துவுடன் — கூடி
சாலையில் நடந்தனரே!

கண்கள் இழந்தவனும் — வாட்டும்
கவலே உருவினனும்
நின்றனன் ஒருசிறுவன் — ஓரமாய்
நீண்ட பொழுதாக!

முத்து விழியிரண்டும் — சிறுவன்
மீதில் விழுந்தனவே!
பக்கம் நெருங்கினனே — அவனைப்
பரிவுடன் பார்த்தனனே!

அழகிய உலகமதை — இறைவா
அற்புத மாய்படைத்தாய்!
பிழைதான் என்னசெய்தான் — கண்கள்
பிடுங்கியேன் வாட்டுகிருய்?

### 34. 'உதவி வேண்டுமா?'

கண்கள் கலங்கிடவே — முத்து
கண்ணீர் உகுத்தனனே!
அன்பாய் உதவிடுவேன் — தம்பி
ஆசையைச் சொல்லிவிடு!

என்று உரைத்தனனே — சிறுவன்
இனிய நகைபுரிந்தான்!
இன்று பசியில்லை — காசுகள்
ஏதும் குறைவில்லை!

பிச்சை எடுத்ததிலே — இன்று
பெரிய வருமானம்!
அக்கரைச் சென்றிடவே — உதவி
அளித்தால் நலமென்முன்!

குருட்டுச் சிறுவனேயே — முத்து
கூட்டி நடந்துசென்றுன்!
பெரியதோர் சாலேதனைக் — கடக்கப்
பெரிதும் உதவிசெய்தான்!

### 35. சிறுவர் சங்கம்

சிறுவர் பலர்கூடி — சங்கம்
சிறப்பாய் அமைத்திருந்தார்!
பெருமைக் குரியதது — முத்து
பொதுச்செய லாளரென்பார்!

அறிவை வளர்த்திடவே — ஒழுக்கம்
அன்பைப் பெருக்கிடவே
நிறைய புத்தகங்கள் — அங்கே
நேர்த்தியாய் வைத்திருந்தார்!

நித்தம் பலசிறுவர் — படித்து
நெஞ்சம் களித்திருந்தார்!
முத்துவும் நண்பர்களும் — அங்கே
முற்றுகை போட்டனரே!

நல்வழி காட்டுகின்ற — புத்தகம்
நாடிப் படித்தனரே!
கல்வி யுடன்பண்பு — எளிதாய்க்
கற்றுத் தெளிந்தனரே!

### 36. ஆசிரியர் ஆனுன்!

ஆறு மணியளவில் — கிழவர்
அங்கே சிலர்வந்தார்!
கூடிய பெரியோர்க்கே — அஆ
கூறினுன் முத்துவுமே!

படிப்பு அறியாத — கிழவர்
பாடம் படித்தனரே!
துடிப்புடன் முத்துரைக்கும் — போதனேத்
திறத்தைப் புகழ்ந்தனரே!

ஆசிரியர் ஆனுன் — முத்து
ஆற்றல் தனைவளர்த்தான்!
பேசிடும் வன்மையிலே — உயர்ந்தான்!
பெரும்பணி ஆற்றிவந்தான்!

இரவு நெருங்கியதும் — மூவரும்
எழுந்து நடந்தார்கள்!
விரைவுடன் வீடுசெல்லும் — பாதையில்
வீரமாய் நடந்தார்கள்!

### 37. மீண்டும் பாடம்!

வாசல் படிதனிலே — அன்னை
வாஞ்சை யுடன்நின்றுள்!
ஆசையாய் முத்துகரம் — பற்றி
அன்புட னேஅணைத்தாள்!

மூன்று நண்பர்களும் — அழகு
முற்றம் அடைந்தார்கள்!
மீண்டும் ஒருதடவை — பாடம்
முயன்று படித்தார்கள்!

மனதில் எழுகின்ற — ஐயம்
மட்டும் குறித்தார்கள்!
இனிதாய் முத்துதந்தை — விளக்க
எல்லாம் அறிந்தார்கள்

மாலைப் பலகாரம் — அன்னை
மகிழ்வாய்ப் பகிர்ந்தளித்தாள்!
ஆவலாய் உண்டபின்னே — மூவரும்
அன்று விலகினரே!

### 38. பிறந்தநாள் பரிசு

மாடிப் படியில் இருந்து அப்பா
இறங்கி வந்தார் கையில்
மணிம ணியாம் புத்த கங்கள்
கண்டு முத்து மகிழ்ந்தான்!
'ஜோடி ஜோடி' யாக இரண்டு
புத்த கங்கள் வீதம்
சொல்ல வொண்ணுப் பெருமி தத்தில்
முத்து வுக்குத் தந்தார்!

முத்து இன்று உன்ற னுக்கு
பிறந்த நாளே யன்றே?
மிகவும் சிறந்த இந்த நூல்கள்
பரிசாய் ஏற்றுக் கொள்வாய்!
புத்த கத்தின் எண்ணிக்கையில்
உனக்குப் பாதி; மீதி
பெருமைக் குரிய உனது சிறுவர்
சங்கத் திற்கு என்ருர்!

### 39. எத்தகைய புத்தகம்?

அறிவைக் கெடுக்கும் நூல்கள் அங்கே
இல்லை! இல்லை! இல்லை!
அன்பைப் பழிக்கும் நூல்கள் அங்கே
இல்லை! இல்லை! இல்லை!
வறுமைக் காகத் திருடச் சொல்லும்
நூல்கள் இல்லை! இல்லை!
வாழ்வில் வெறியை ஊட்டும் நூல்கள்
ஒன்று கூட இல்லை!

நிறைய படங்கள் அரிய நீதி
நிறைந்த குழந்தை நூல்கள்
நேர்த்தி யாக வாழ்ந்த பெரியோர்
வாழ்வை விளக்கும் நூல்கள்
பெருமைக் குரிய ஒருமைப் பாட்டை
புகலு கின்ற நூல்கள்
பரவி இருக்கக் கண்டு முத்து
பரவ சத்தைக் கண்டான்!

### 40. குடிகாரன் வந்தான்!

இன்ப நிலையை மாற்ற அங்கே
எவனே ஒருவன் வந்தான்!
இரண்டு கண்ணும் சிவக்க நிறைய
குடித்து விட்டு வந்தான்!
என்னென் னவோ உளறிக் கொண்டு
கால்கள் ஆட்டம் போட
எவரு டைய இசைவும் இன்றி
எருமை போலே வந்தான்!

அவனைக் கண்ட முத்து திகைத்தான்
'அப்பா இவனைப் பிடித்து
அனுப்பி வைப்பீர் போலீசுக்கு!
அங்கே புத்தி கிடைக்கும்!'
படப டப்பில் முத்து சொன்ன
வார்த்தை கேட்ட அப்பா
பாய்ந்துப் பிடித்துப் போலீ சுக்கு
போனில் தகவல் சொன்னுர்!

[தொடரும்]

# விந்தை மனிதரின் விசித்திரம்

ஆண்டு முழுவதும் பார்க்கக்கூடிய ஒரே நிரந்தர பொறியியல் கண் காட்சியைக் கோவை நகரின் மையத்தி லுள்ள 'யு. எம். எஸ். கட்டிடத்தில்' புதுமுறையில் திருத்தி அமைத்துள்ள விந்தை மனிதர் ஜி. டி. நாயுடு, சமீபத்தில் அதைக் காண வந்த சென்னை, பெங்களூர் கல்லூரி மாணவிகள், மாணவர்கள் வியப்படையும்படியான ஒரு காரியத்தைச் செய்தார்.

சிறிய இரும்புப் பெட்டி ஒன்றை அவர்கள் முன் மேஜைமீது வைத்தார். அதன் மேல் பகுதியில் கண்ணுடி வழியாக தெரியக்கூடிய பத்து ரூபாய் நோட்டு காட்சி யளித்தது. பெட்டிக்கு நான்கு பூட்டு அமைப்புக்கள் உள்ளன; ஆனல் அவை நான்கிற்கும் ஒரே சாவி; ஆனல் ஒவ்வொன்றிற்கும் வெவ்வேறு முறையில் சாவியைக் கையாளவேண்டும். பெட்டியைச் சாவியைக் கொண்டு திறக்கும் முறையை ஜி. டி. நாயுடு அவர்களுக்கு ஒருமுறை செய்து காண்பித்தார். பின்னர் சாவியை அவர்களிடம் கொடுத்து, அதை சரியாகப் பயன்படுத்தித் திறப்பவர்கள் பெட்டியுள்ளே உள்ள பணம் முழுவதையும் எடுத்துக் கொள்ளலாம் என்ருர். அதுசமயம் அங்கிருந்தவர்களில் ஒருவர் ஒரு சென்னை கம்பெனியின் தொழில் நுட்ப ஊழி யர், மற்றவர் அதே ஸ்தாபனத்தின் தொழில் நுட்ப அதிகாரி, ஒருவர் எஞ்சினியரிங் கல்லூரி மாணவர், ஒருவர் இளம்பத்திரிகையாளர், மற்றவர்கள் மாணவிகள். ஒவ் வொருவருக்கும் ஒவ்வொரு சந்தர்ப்பம்தரப்பட்டது. எனி னும் ஒருவர்கூடச் சாவியைச் சரியாகப் பயன்படுத்தி திறப்பதில் வெற்றி பெறவில்லை!

கண்காட்சியில் பெட்டி வைக்கப்பட்டது முதல், இது வரை ஒரே ஒரு வாலிபர்தான் வெற்றிகரமாக அந்தச் சாதனையைச் செய்திருப்பதாகவும், பெட்டியைத் திறந்து அதில் அதுசமயமிருந்த சுமார் 460 ரூபாயை அவர் எடுத்துக் கொண்டதாகவும் தெரிகிறது.

"குடியரசு"

# தமிழ் நாடகம் பார்த்தேன்

—L. C. ரிச்சர்ட்—

ராஜா அண்ணுமலை மன்றத்தில் பெயர்பெற்ற நகைச்சுவை நாடகம் இன்று நடக்கவிருக்கின்றது எனக் கேள்விப்பட்டு ஓடோடி 'சீட்' ரிசர்வு செய்ய முயன்றேன். எல்லாம் விற்ருய் விட்டது என்று கையை விரித்தார் கவுண்டரில் உள்ளவர். இது வியாபார முறை, 'வேணுமென்ருல் ரூ. 10, 5 டிக்கட்டுகள் இருக்கின்றன' என்று சிரித்தார் அன்புடன். அவ்வளவு சிறப்பாக இந்த நகைச்சுவை நாடகத்தை நான் மதிப்பிடாதலின் மாலை 6½மணி ஆட்டத்திற்கு 5½ மணிக்கே மன்றம் சேர்ந்தேன். 'க்யூ' பலமாக இருந்தது ரூ. 1-க்கே. சிரமத்தை எண்ணுமல் வாலில் ஒட்டிக் கொண்டேன். சிலர் தங்கள் நண்பர்களை பக்கத்தில் நிற்கவைத்து இரட்டையாகச் சென்றனர். இது 'கியூ' முறைக்கு முரண்பாடல்லவா? கவுண்டர் அடைந்ததும் அவருக்கு தன் முன் வாங்க சலுகை காட்டிவிட்டார். என் ஒரு ரூபாய் டிக்கட் வாங்கினதும் உள்ளே சென்று பார்த்தால் ரூ. 2/-வகுப்புக்கு இரண்டு வரிசைதான் பின் தள்ளியிருந்தது. நான் உட்கார வேண்டிய இடம் 'பரவாயில்லையே' என்று எண்ணிக் கொண்டு அமர்ந்தேன். எனது இடது பக்கத்தில் இரு வாலிபர். வலது பக்கத்திலும் இரு வாலிபர். சிறிது நேரத்திற்கெல்லாம் அவர்கள் எழுந்து தங்கள் கைக்குட்டைகளை சீட்டில் விரித்துப்போட்டுவிட்டு வெளியே சென்றனர். என்னைத் தாண்டிச் செல்லவில்லையே என்று எண்ணி இருக்கும் பொழுது என் வலது கை இருவரும் எழுந்து தாங்கள் வாசித்துக் கொண்டிருந்த தினசரியை சீட்டில் விரித்துப் போட்டுவிட்டு என்னைக் கடந்து வெளியேறினர். நெருக்கமான இடைவழி, என் கால்களைக் கூட சரிவர பொறுத்த முடியவில்லை. இருந்தாலும் என் முழங்கால்களில் தங்கள் அங்கங்களை அழுத்தி முண்டி சங்கடத்தோடு கடந்தனர். 'நல்ல வேளை, பெண் இனமாக இல்லை' என்று நினைத்துக் கொண்டேன். சிறிது நேரத்தில் அரிசி விலையைப் பொருட்படுத்தாது திவ்யமாக வளர்க்கப்பட்ட இரண்டு பெண் உடல்கள் என்னைக் கடந்து செல்ல இடைவழியை அகலமாக்கிக் கொண்டு வந்தன. என்னைக் கடக்கும்பொழுது பஞ்சு மெத்தைபோல் அவர்கள் அங்கங்கள் அழுத்திச் சென்றது எனக்கே ஒரு ஆச்சிரியமாகவிருந்தது! ஆண்கள் வேதனையையல்லவா விட்டுச் சென்றனர். இடம் இல்லையென்று அவர்கள் எனக்கு நேர் பின் வரிசையில் அமர்ந்தனர். அவர்களைக் கண்ட பெண் இனம் இனத்தோடு சேரவேஸ்திரீகள் கூட்டம் சிறிது பலமாகவே காணப்பட்டது. அவர்களில் சிலர் கைக்குழந்தைகளையும் வைத்திருந்தனர்.

6½ மணி நெருங்கவே கூட்டமும் நெருங்கியது. வெகு சிரமப்பட்டு சிலர் முட்டி நெழிந்து என் இருபக்கங்களிலும் இடம் காலியிருப்பதை வெகு தொலைவிலிருந்து கவனித்துவிட்டு வருவார்கள். ஆனுல் கைக்குட்டை, தினசரி ரிசர்வேஷனைக் கண்டதும் தலை வணங்கி வேறு இடம் தேட செல்வர். இதுபோன்ற ரிசர்வேஷன் பஸ்ஸிலும் ரெயிலிலும் பிரமாதமாகச் செய்யப்பட்டு நிர்வாக உபவிதிகளை விடவெற்றிகரமாகஅமுலாக்கப் பட்டுவருவது நமது முன்னேற்ற நலனுக்குத் தக்க அறிகுறியே!

6½ மணிக்கும் ஆட்டம் தொடங்கவில்லை. குழுமியிருந்தவர் பொறுமையை இழந்தனர். கலகலவென்று பேச்சு அலைபோல் கொந்தளித்தது. சிலர் எழுந்து சுற்றும் முற்றும் தங்கள் பார்வையை வீசினர். பார்வை நிலையாக சில நிமிடங்கள் நின்ற திக்கெல்லாம் பெண்கள் பகுதியாகவிருந்தது ஆச்சரியமில்லை. அங்குதான் சிறு புயல் தோற்றம்! பண்டைகாலத்தில் 'கொட்டாய்' நாடகப்போக்கு ஞாபகம் வந்தது 'டேய் என்னடா பன்றீங்க!' என்ற கூச்சலும் எழும்பியது. சிறிது நேரத்தில் விளக்குகள் அணைக்கப்பட்டது. மன்றத்தின் மேலேயுள்ள மறைமுகமான விளக்குகள் மாத்திரம் எரிந்தன. மக்கள் பெருமூச்சு பெரும் அலைபோல் மன்றத்தின் ஒரு முகமாக வீசிச்சென்றது. பின் சற்று அமைதி மேடைத்திரை விலகவில்லை. மறுபடியும் புயல்போல் மக்கள் ஆட்சேபனை புரண்டு ஓடியது! பேரொலி துவக்கப்பட்டு மன்றத்தையே அதிரவைப்பது போல் இடித்தது ஆரம்பகட்டம்.நகைச்சுவை நடிகரைக்கண்டதுமே ஒரு பொதுச்சிரிப்பு குலுங்கியது மன்றத்தில். அவர் 'விட்' அடித்தால் மன்றமே 'கொல்' என்று நகைத்தது. பின் வரிசையிலுள்ள எங்கள் போன்றவர்களுக்கு சிரிப்புக்கு காரணம் என்னவென்று அறியக்கூடவில்லை. ஆனுல் நாங்களும் சிரித்தோம்! பிறகு என்ன சொன்ஞர் என்று அருகிலுள்ளவர்களைக் கேட்க அவர் அடுத்தவரைக் கேட்க இதுவே வெகுநேரம் சலசலப்பு தொடர்ந்துபோக ஏதுவாகயிருந்தது.

'ஆண்கள் தலைகள் நிலையற்று அசைகின்றனவே! ஐயா, ஒரு நிலையில் தலையை குத்தி நிறுத்துங்கள்!' இது போன்ற குரல்கள் அடிக்கடி எழுந்தது. பின் இருந்த பெண்கள் பொதுவில் குள்ளம். ஆகவே முன் வரிசையிலுள்ள ஆண்கள் தலைகளின் இடுக்கில்தான் மேடைப்பார்வைகிட்டியது. ஆனுல், ஆண்கள் தலைகள் பக்கத்துக்குப் பக்கம் அசைந்து கொண்டிருந்ததினுல் பெண்கள் பின்னிருந்து திண்டாடினர்.

என்பக்கத்திலிருந்து இரு வாலிபர் நடிகரின் அசல் பெயர், அவன் அப்பன் பெயர், அவன் பாட்டன் பெயர், குலம், கோத்திரம், ஊர், வழக்கம், ஏன் அவர் சுய சரிதையை தொடர் கதையாக பரிமார ஆரம்பித்துவிட்டார். இடையே நாடகத்தைவிட இவர் கூற்று மிகவும் வசீகரமாகவிருந்தது. இதை ரசித்தவர் நான் மாத்திரம் அல்ல. குறுக்கே சிலர் விளக்கம் தேவைப்பட்டு அதற்கும் பதிலளித்தார்கள். இதனுல் மேடை நாடகத்தைவிட மிகவும் பாராட்டக் கூடிய நிலை அங்கு உருவாகிவந்தது. அமைதியாயிருங்களென்று எவனும் வேண்டுகோள் விடுக்கவில்லை. குழந்தையொன்று 'வீல்' என்று கதறவே 'பால்புட்டி கொண்டு வரவில்லையா?' என்று ஒரு குரல் தெளிவாக எழுந்தது. 'கொல்லென்று சிரித்தனர் அப்பகுதியிலுள்ளவர்கள். குழந்தை தன் அழுகையை நிறுத்தவில்லை. 'புட்டியிருக்கும், பால்தான் இல்லை' என்று மற்ருெரு ஆண் குரல் விளக்கம் தந்தது.

பொதுவில் கதைப் போக்கு புரிந்துகொண்டு பழைய காலத்து ஊமை சினிமாபோல் ரசித்தோம். ஒரு சில இடங்களில்தான் பாத்திரங்களின் வசனம் காதில் தெளிவாகப்பட்டது. சந்தோஷமாக நாடகம் முடிந்தது. 'நல்லாயிருந்தது' என்று ஒருவரையொருவர் கண்டு மெச்சிக் கொண்டோம். வளர்க தமிழ் நாடகம்! வாழ்க நற்தமிழர்!



# மறைந்த கண்டத்தின் மர்மம்

*அட்லாண்டிஸ் என்னும் நிலப்பரப்பு இருந்ததாக ஆதிகாலம் முதல் பேசப்பட்டு வருகிறது. அட்லாண்டிக் சமுத்திரத்தில் இப்படி ஒரு கண்டமோ, தீவோ இருந்தது உண்டா? இக்கேள்வியை ஆராய்கிருர் இக்கட்டுரையாளர்.*

— ஆசிரியர்.

அட்லாண்டிஸைப்பற்றிப் பன்னெடுங் காலமாக நூல்கள் பேசுகின்றன.

12,000 ஆண்டுகளுக்கு முன்பு, ஜிப்ரால்டர் ஜலசந்திக்கு அப்பால் மாபெரும் வளமான தீவு ஒன்று இருந்ததாக 'திமியஸ்', 'கிறித்தியஸ்' என்னும் தாது நூல்களில் குறிப்பிடுகிருர், கிரேக்க ஞானியான பிளேட்டோ. இத்தீவில் அட்லாந்தியர்கள் வசித்து வந்தார்கள். அட்லாந்தியர்கள் வலிமை மிக்கவர்கள்; போர்க் குணமுள்ளவர்கள்; கலைச் சிறப்பு மிக்கவர்கள்; கட்டிடக் கலையில் சிறந்தவர்கள், பெரிய பட்டணங்களை நிறுமித்தவர்கள். அட்லாந்தியர்கள் அத்தீவியரின் மூதாதைகள்மீது போர் தொடுத்தனரென்றும், அப்போரில் பெருந் தோல்வி கண்டனர் என்றும் பிளேட்டோ எழுதுகிருர். பின்னர், அதை விடப் பேரிழப்பு ஒன்று நேர்ந்ததாம். ஒரே நாளில் அட்லாண்டிஸ் தீவைக் கடல் விழுங்கிவிட்டதாம்! இந்தக் கதை இன்றைக்கும் மிகச் சுவையாகவே இருந்துவருகிறது.

ஆனுல் இன்றுவரை இச்சுவையான பிரச்னைக்கு விஞ்ஞானம் விடை தரவில்லை. இதுகுறித்து விஞ்ஞானிகளிடையேமிகமுரண்பட்ட கருத்துக்கள் நிலவி வருகின்றன. சிலர் அட்லாண்டிஸ் என்பது பிளேட்டோவின் கட்டுக்கதை என்கிருர்கள். அட்லாண்டிக் சமுத்திரம் கோடானுகோடி யுகமாக அப்படியே இருந்து வருகிறதென்றும், எனவே அட்லாண்டிஸ் என்னும் நாடு இருந்திருக்கவே முடியாதென்றும் நில இயலாளர், கடல் இயலாளரிடையே பரந்த கருத்து இருந்து வருகிறது.

அட்லாண்டிக்கடலிலுள்ள சில தீவுகள், உதாரணமாக கானரித் தீவுகள் ஏதோ ஒரு அமிழ்ந்துவிட்ட கண்டத்தின் பகுதிகளாக இருத்தல் வேண்டுமென்று இப்பொழுது விஞ்ஞானிகள் கருதுகிருர்கள். கானரித்தீவின் ஆதி குடிகளான குவான்சேக்கள், அட்லாந்தியர்களின் சந்ததியினர் என்ற கருத்தும் உண்டு. சில விஞ்ஞானிகள் இதை எதிர்க்கவும் செய்கிருர்கள்!

அட்லாண்டிக் சமுத்திரத்தின் நிலக்கிடக்கையை ஆராய்ந்தோர், அட்லாண்டிஸின் இருக்கைக்குரிய ஆதாரங்கள் பலவற்றைக் கூறுகின்றனர். அட்லாண்டிக் சமுத்திரத்தின் அடிப்பரப்பிலுள்ள சில கணவாய்கள், பெரிய ஆறுகளின் படுகைகளாய் இருந்திருத்தல் கூடும்; அதாவது இப்பகுதிகள் ஒரு காலத்தில் நீர் மட்டத்திற்கு மேலே, தீவுகளாகவோ, கண்டமாகவோ இருந்திருத்தல்கூடும். அட்லாண்டிக் சமுத்திரத்தின் நீரோட்டங்களை ஆராயுங்கால், கடந்த காலத்தில் ஏதோ தடைகளால் அவை முற்றிலும் வேறு திசையில் சென்றன என்று தெரிகிறது. இப்போது கடலில் ஆழ்ந்திருக்கும் அட்லான்டிக் மலைத்தொடர், அந்நாளில் கடலுக்கு மேலே இருந்தது என்பதற்குப் பல அறிகுறிகள் உண்டு.

நில இயல், பூகோள இயல் அம்சத்தைத் தவிர, வரலாறு, கலாச்சாரம், மனித இயல் ஆகியவற்றின் நோக்கிலும், அட்லான்டிஸ் பிரச்னை முக்கியமானதே. பிரபல கவிஞரான பிரியுசோவ் தனிக் கண்ணேட்டத்தில், இப்பிரச்னையை முன்பே ஆராய்ந்திருக்கிருர். பண்டைக்கலாசாரங்கள் அனைத்தும், தமக்குள் மிக வேறுபட்டிருப்பினும், ஒரு குறிப்பிட்ட பொதுத்தொடர்பைக் கொண்டிருக்கின்றன என்றும், பண்டை மக்களின் கலாசாரத் தோற்றுவாய் அட்லாண்டிஸ்தான் என்றும் அவர் எழுதியுளார்.

அரை நூற்றுண்டுக்காலத்தில், எத்தனையோ விஞ்ஞான அற்புதங்கள் நிகழ்ந்துவிட்டன. 'விஞ்ஞானமும் வாழ்வும்' என்னும் இதழ், 1963-ம் ஆண்டில், 'பழைய மர்மங்கள், வரலாறுகள், புது யூகங்கள்' என்னும் தலைப்பில் ஒரு அருமையான கட்டுரையை வெளியிட்டுள்ளது. இதனை எழுதிய கோர்போவ்ஸ்கி, உலக மக்களிடையே ஆழ்ந்த கலாசார வேற்றுமைகள் இருப்பினும், சில ஒற்றுமைகளும உண்டென்றும், அவர்களிடையே ஆயிரக்கணக்கான கிலோமீட்டர் தூரம் இருப்பதால், இந்த ஒற்றுமையை நாம் எளிதில் புறக்கணித்துவிட முடியாதென்றும் கூறியிள்ளார். அமெரிக்காவில் வாழ்ந்த ஆஸ்தெக்குகளும், பண்டைக் கால பாபிலோனியர்களும், மிகுந்த உருவ ஒற்றுமை உடையவர்கள் என அக்கட்டுரை ஆசிரியர் எடுத்துக் காட்டுகிருர். ஒரே தோற்றமுடைய கோவில்களின் புகைப்படங்களும் இக்கட்டுரையில் உண்டு. ஒரு கோயில், கம்போடியக் காடுகளின் மத்தியில் உள்ளது; மற்ருென்று மத்திய அமெரிக்காவில் உள்ளது! இந்நூலில் இது போன்ற எடுத்துக்காட்டுகள் பற்பல. எனவே பண்டைக்காலத்தில் மனித இனம் கொடிய நாசத்திற்கு உள் ஆயிற்று என்றும், பழைய இனத்துடன் பழைய நாகரிகமும் மறைந்து போயிருக்கலாமென்றும் அறிஞர் கோர்போவ்ஸ்கி கூறுகிருர். அவரது கருத்து, பழம்பெரும் கவிஞரான பிரியுசோவியன் கருத்தை ஒட்டியிருப்பது காண்க.

மீண்டும் சொல்கிருேம்:—

'அட்லான்டிஸ்' என்னும் நிலப்பரப்பு இருந்ததா, இல்லையா என்பதை விஞ்ஞானம் இன்னும் உறுதிப்படுத்தவில்லை! அட்லாண்டிக் சமுத்திரப்படுகையை நாம் துருவித்துருவி ஆராய வேண்டும்; நிரம்பத் தகவல்களைச் சேகரித்து, கவனமாகப் பரிசீலிக்க வேண்டும் இது ஒரு மாபெரும் பணி. பற்பல அரசுகளும், பல்வேறு விஞ்ஞானிகளும் கூட்டாக ஈடுபட்டாலே இது நிறைவேறும்.

'சிந்தனை' என்னும் சமூக-பொருளாதார இலக்கியப் பதிப்பகம், அண்மையில் சோவியத் அறிஞர் என். ஷிரோவ் எழுதிய 'அட்லாண்டிஸ்' என்னும் நூலை வெளியிட்டுள்ளது. முற்காலத்தில் 'அட்லாண்டிஸ்' கண்டம் இருந்தது உறுதி என்கிருர் இவர். இந்நூலில் 'அட்லாண்டிஸ்' குறித்து ஏராளமான விவரங்கள் உள்ளன. அண்மைக் காலத் தகவல்களும் நிரம்ப உண்டு. இது உண்மையிலேயே மிக உருக்கமாக எழுதப்பட்ட சிறந்த விஞ்ஞான ஆராய்ச்சி நூலாகும்.

——

# டிடோவும் ரஷ்யாவும்

73 ஆண்டுகள் நிரம்பிய யூகோஸ்லாவியா நாட்டு அதிபர் டிடோ கடந்த மூன்று மாதங்களுக்குள் கெய்ரோ, ஆல்ஜியர்ஸ், ஸ்காண்டிநேவியா, கிழக்கு பெர்லின், (செகோஸ்லோவோகியாவின் தலைநகராகிய) பிராக், முதலிய இடங்களுக்கு, விஜயம் செய்துவிட்டு அண்மையில் ஆருவது பிரயாணமாக அவர் மாஸ்கோ நகருக்கு விஜயம் செய்துள்ளது மிகவும் பிரமிக்கத்தக்கதே. விரைவில் ஆல்ஜியர்ஸ் நகருக்குச் சென்று அங்கு கூடவிருக்கும் ஆசியா-ஆப்ரிக்கா ஒற்றுமை மகாநாட்டிலும் இவர் பங்கு கொள்ள தயாராக உள்ளார், என்றும் தெரிய வருகிறது.

இவரைக் கூர்ந்து கவனித்து வரும் மேல் நாட்டு அரசியல் வாதிகளுக்கும், இராஜதந்திரிகளுக்கும் அவர்களுடைய மனதில் இவருடைய நடவடிக்கைகள் சஞ்சலத்தை விளைவித்துள்ளன. கம்யூனிஸ்டு நாடுகளுக்கு இவர் விஜயம் செய்துள்ளதனுல் சோவியத் கூட்டணி நாடுகளுடன் இவர் ராஜி செய்து கொள்ள முன் வந்துள்ளாராயென்று அவர்கள் ஐயம் கொண்டுள்ளார்கள். கோஷ்டி சேரா நாடுகளுக்கு நேருஜியின் பிற்காலத்தில் அவர் வகித்து வந்த பிரதிநிதித்துவத்தை டிடோ ஏற்க முன்வந்துள்ளாராவென்றும் அவர்கள் மேலும் வினவுகிருர்கள். யூகோஸ்லேவியா ஓர் சுதந்திர நாடு என்று டிடோ அடிக்கடி வலியுறுத்துகிருர். கிழக்கு பெர்லின் விஜயத்தின்பொழுது உல்பிரைட்டின் படைப்பாகிய பெர்லின் சுவற்றைப் பார்ப்பதற்கு இவருக்கு விடுத்த அழைப்பை இவர் புறக்கணித்து விட்டார். கம்யூனிஸ்டு நாட்டுத் தலைவர்களுள் (கியூபா அதிபர் காஸ்ட்ரோ, அல்பேனியா அதிபர் ஹோக்ஸாவைத் தவிர) இன்றைய ரஷ்யா நாட்டு நிர்வாகிகளைச் சந்தித்தவர்களுள் டிடோ முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவர். ஏனெனில் மாஸ்கோ விஜயத்தின் பொழுது இவருக்கு சிவப்புக் கம்பளங்கள் விரித்து வரவேற்பு அளிக்கப்பட்டது. இவர் ரஷ்யா அதிபர்களுக்குச் சமமான அந்தஸ்து பெற்றவர் யென்று எண்ணிக் கொள்ள இடமிருக்கிறது யென்று 'கார்டியன்' பத்திரிகை குறிப்பிட்டுள்ளது.

யூகோஸ்லாவியாவுக்கும், ரஷ்யாவுக்கும் இடையே இன்று வளர்ந்து வரும் உறவிலிருந்து யூகோஸ்லேவியாவின் நட்பை ரஷ்யா விரும்புகிறது என்பது வெட்ட வெளிச்சம். இத்திக்கில் இன்றைய சோவியத் நிர்வாகத்தின் நோக்குக்கும் பதவியிழந்த குருஷேவின் நோக்குக்கும் வித்தியாசம் காணப்படவில்லை யென்பதும் வெட்ட வெளிச்சம். மாஸ்கோவில் டிடோ வந்திறங்கிய தினத்தன்று சீனு இவ்விரு நாடுகளையும் கடுமையாகத் தாக்கிப் பிரசாரத்தில் ஈடுபட்டது. சில நாட்களுக்குப் பின்னர் ரஷ்யாவின் தினசரிப்பத்திரிகை 'பிராவ்டா', நாலாயிரம் வார்த்தைகள் கொண்ட ஓர் தலையங்கத்தில் சீனுவின் பிரசாரத்தை எதிர்த்துக் கண்டனம் தெரிவித்தது. இத்தலையங்கம், வருங்காலத்தில் சீன-ரஷ்யா உறவில் மாறுதல்கள் ஏற்படுவதற்கான அறிகுறிகள் ஒன்றும் காண இடங்கொடுக்கவில்லை.

ஆப்ரிக்கா-ஆசியா நாடுகளில் நட்புறவை வளர்க்கும் டிடோவின் ஆதரவைப் பெற ரஷ்யா விருப்பங் காட்டுகிறது என்பதில் ஐயமில்லை. சீன-ரஷ்யா குளிர் போர் இவ்விரு நாடுகளின் பிரதிநிதிக்கூட்டங்களில் தான் கடுமையாக இடம் பெறுகிறது என்பதால் ரஷ்யாவின் போக்கில் இத்தகைய மாறுதல் தோன்றுகிறது என்று கருதப்படுகிறது.

கடந்த பத்து ஆண்டுகளாக கோஷ்டி சேரா நாடுகளின் கொள்கைகளைப் பற்றி டிடோ கொண்ட கருத்துகளில் அடிக்கடி மாறுதல்கள் தலையெடுத்துள்ளன. முதலில், 'உலக நாடுகள் இரண்டு விரோத கோஷ்டி நாடுகளாக உருவாகியுள்ளன. இவ்விரு கோஷ்டி நாடுகளில் மேல் நாடுகள் தம் பாதுகாப்பிலேயே தம் கவனத்தைச் செலுத்துகின்றன' என்று இவர் கூறினுர். பின்னர் 1957-ல் இவர் 'யூ. எஸ். எஸ். ஆர், யூ. எஸ்ஸுடன் கூடி உலக நாடுகளைத் தங்கள் ஆதிக்கத்தில் இயக்க விருப்பம் காட்டுகிறது' என்று கூறினுர். இப்பொழுது இக்கருத்தில் மாறுபாடு காண்பது வெட்ட வெளிச்சம்.

யூகோஸ்லேவியாவுக்கும், ரஷ்யாவுக்கும் இருந்துவந்த உறவில் மாறுதல் காணத் தொடங்கியது டிடோ 1962-ல் ரஷ்யா விஜயம் செய்த நாட்களிலிருந்து, என்று திட்டவட்டமாகக் கூறலாம். அதே ஆண்டில் தான் நாட்டு இளம் மேதைகள் டிடோவின் கொள்கைகளை எதிர்த்துசர்ச்சைகளைத் துவக்க ஆரம்பித்தார்கள். இச்சர்ச்சைக்கு ஆதரவளித்தவர்களில் குறிப்பிடத்தக்கவர் மிஹாஜ்லோ மிஹாஜ்லௌ என்பவர். ரஷ்ய இலக்கிய பேராசிரியராகிய இவர், 'மாஸ்கோ கோடைகாலம் 1964-ம் ஆண்டு' என்ற ஓர் கட்டுரையை வெளியிட்டார். யூகோஸ்லேவியா நிர்வாகம் விரைவில் இக்கட்டுரை சட்டத்துக்குப் புறம்பானது என்றுகூறி அதைத் தடை செய்தது. பேராசிரியர் சோவியத் நாட்டை இழிவுபடுத்தி இக்கட்டுரையைத் தீட்டியுள்ளார் என்று குற்றம் சாட்டப்பட்டு 9 மாதம் சிறை தண்டனையைப் பெற்ருர். இறுதியில் பல்கலைக்கழகப் பதவியிலிருந்து இவர் விலக்கப்பட்டார். தடைசெய்யப்பட்ட கட்டுரை மேல்நாடுகளில் பிரசுரிக்கப்பட்டு மிகுந்த பிரபலத்தையும் பெற்றுவிட்டது. நாட்டில் இன்றைய இளைஞர்கள் மார்க்ஸிஸத்தைக் கற்றறிய அவா கொண்டுள்ள அளவுக்கு வேறுநாடுகளில் காண்பதறிது என்று சொல்லப்படுகிறது. இவர்கள் 'ஸ்டாலினிஸம்' 'லெனிஸிஸம்' இவ்விரண்டு கொள்கைகளிலும் வித்தியாசம் காண மறுக்கிருர்கள் என்றும் தெரிய வருகிறது.

வருங்கால சந்ததியார்களிடம் இத்தகைய மாறுதல் நோக்கு வளர்ந்து வருவது வயது, முதிர்ந்த யூகோஸ்லாவ் அதிபருக்குக் களிப்பை விளைவிக்கவில்லை, என்று ஐயமறக் கூறலாம்.

[2-ம் பக்கத் தொடர்ச்சி]

மற்ற சாதுக்களையும் உயிர் நிலை உணர்ந்த பெரியார்களையும் அற வாழ்க்கையாளர்களையும் மற்றும் பல தூய்மை தேடும் தூயோர்களையும் அவர்கள் பழக்க வழக்கங்களையும் உற்று நோக்குங்கள். இரவில் அவர்கள் எழுந்து எவ்வளவு உருக்கத்தோடு இறைவனை வழுத்துகின்றனர்.

'வள்ளல் உன்னைப் பாடப் பாட
வாய் மணக்குதே'

என்றபடி வாய் மணக்கப் பாடுகிருர்கள். அத்தனை பெரியோர்களும் தூயோர்களும் இறைவனை வழிபட்டுக் கொண்டே இருக்கிருர்கள். பின்னும், இடைவிடாது அந்த அற வாழ்க்கைப் பெரியோர்களே இறை அருளை நாடித் தொழுதுகொண்டு இருக்கிருர்கள். அதைக் கண்டும் கேட்டும் தூய்மையில் முதிராத நீ அத்தெய்வீக வேலையில் இடையீடு இன்றி ஈடுபடாமல் இருக்கலாம் என்று நினைப்பதே வெட்கமும் அச்சமும் தருவதாகும். விழி! எழு!! உழை!!!

ஆ! நமக்கு எந்தவித தூய்மைக் குறைவும் வேறு வேலையும் இன்றி வாய் நிறைய முழுமனதோடு நம்முடைய இறைவன் பேருளைப் புகழ்ந்து பாடிக் கொண்டே இருக்கும் வாய்ப்பு,

'பாடும் பணியே பணியாய்
அருள்வாய்'

என்றபடி கிடைத்தால் எவ்வளவு இன்பமாக இருக்கும்!

ஓ! உனக்கு உண்பதும், அருந்துவதும், உறங்குவதும் தேவையின்றி ஆனுல் இறை அருளைப் போற்றுவதும் ஆன்ம முன்னேற்றப் பயிற்சிகளிலேயே ஈடுபட்டு இருப்பதுவும் சாத்தியமானுல் எவ்வளவு இன்பமாக இருக்கும்!

இப்போது பல தேவைகளுக்காக இவ்வுடலுக்கு ஊழியம் கண்டிப்பாகச் செய்யவேண்டி உளது. அப்படித்தேவை இன்றேல் எவ்வளவோ இன்பமாக இருப்பாய்!

இப்பருவுடல் தேவைகள் அறவே இல்லாமலும் ஆனுல் எப்போதும் ஆன்ம இன்ப நிலையிலேயே ஆழ்ந்து இருக்கவும் ஆண்டவன் அருள் புரிந்து இருப்பின் எவ்வளவு இன்பமாக இருக்கும். ஆனுல் அந்தோ! அந்த அமைதித் தியான இன்பம் கிடைப்பது எவ்வளவு அரிதாக உளது!

எந்த உயிரிடத்திருந்தும் தனக்கு ஆறுதலோ, தேறுதலோ, வசதியோ தேடாத நிலைமையை எய்திவிட்டால் அப்போதுதான் முழுமையாக இறை அருளில் மகிழத் தொடங்குகிருன். அப்போதுஇவ்வுலகிலே தனக்கு என்ன நேர்ந்தபோதிலும் அமைதியுடன் இருப்பான்.

அப்போது அவன் பெரிய இனிய நிகழ்ச்சிகளைப்பற்றிக் குதூகலம் கொள்ளுவதும் சிறுமைதரும் காரியங்களுக்காகச் சங்கடப்படுவதும் இல்லை. ஆனுல் முழுமனதுடன் நம்பிக்கையுடனும் இறைவனிடம் தன்னை ஒப்படைத்துவிடுவான். அந்நிலையில் ஆண்டவனே அவனுக்கு அனைத்தும் ஆகும். அவனுக்கு அப்போது எப்பொருளும் அழிவதும் மரிப்பதும் இல்லை. அனைத்தும் இறை அருளின்படி இருப்பதையும் இயங்குவதையும் 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்பதையும் அனைத்துயிரும் அண்டகோளங்கள் முழுவதும் அவன் ஆணைப்படி தங்கு தடையின்றி பணிந்து போவதையும் காண்பான்.

உனது முடிவையும் எவ்வளவு திண்ணமாக இழந்த காலம் திரும்பி வராது என்பதையும் எப்போதும் நினைவில் வை. மாருத கருத்தும் குன்ருத இடைவிடா உழைப்பும் இன்றி உயர் தூய்மைத் தன்மை பெற இயலாது.

கருத்தின்றியும் அரை குறை மனத்துடனும் ஆர்வம் இன்றியும் இருக்கத் தொடங்கினுல் உனக்குப் பெரும் கேடும் தீமையும் விளையத் தொடங்கிவிடும்.

அற வாழ்க்கையை நாம ஆன்ம ஆர்வத்துடன் இருந்தால் அளவற்ற அமைதி காண்பாய். வாழ்க்கையின் தொல்லைகளும் கவலைகளும் குறைவாக உணர்வாய். இறை அருளாலும் தூய்மையின்பால் உள்ள ஆர்வத்தாலும் அவ்வித அமைதியும் இன்பமும் பெறுவாய்.

ஆர்வமும் ஊக்கமும் உள்ள தூயோன் எந்த நிலைமை ஏற்படினும் அதற்குத் தயாராக இருப்பான். துச்ச இச்சைகளையும் தீயவைகளையும் எதிர்ப்போராடல் கடினமான உடல் உழைப்புகளை விட கடினமான செயல். சிறு சிறு குற்றங் குறைகளை எதிர்த்து நில்லாதவன் சிறுகச்சிறுக பெரும் தீ நெறிகளில் விழுந்து ஆழ்ந்துவிடுகிருன். ஒரு நாளை நல்ல முறையில் பயன்படுத்தினுல் அன்று மாலையில் மகிழ்ச்சியுடன் இருப்பாய் என்பது எப்போதும் திண்ணம். உன்னை நீ கண்காணித்துக் கொண்டே இரு. உனக்கு நீயே உற்சாகமும் ஊக்கமும் ஊட்டிக்கொள். உன்னை நீயே எச்சரித்துக்கொள். மற்றவருக்கு என்ன நேர்ந்தாலும் உனது உள்ளத் தூய்மையையும் உனது உண்மை உயிர் நலத்தையும் கருதாமல் இராதே.

உன்னை எவ்வளவுக்கெவ்வளவு நீயே தூய்மைப்படுத்திக்கொள்ள அற வழியில் கண்டிப்பாகக் கட்டுப்படுத்திக்கொள்கிருயோ, அவ்வளவு நீ ஆன்ம முன்னேற்றத்தை அடைவாய்.

**இறை அருள் நிறைக.**

**வலங்கிமான் டி. மு. கோ.**
**கு. டி. மு. கோ. O. S. 189/58**

காசியம்மாள் வகையரு
—மனுதார்கள்.

மீனுக்ஷியம்மாள்
—எதிர்மனுதார்.

ஷை நெம்பரில் ஏல நோட்டீஸ் போய் சர்வாகாததினுல் மறு நோட்டீஸ் ஒட்டி சர்வு செய்யவும் பப்ளிகேஷனுக்கும் உத்திவாகி நாளது 30-7-65ல் போடப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணையுள்ளவர்கள் ஷை கோர்ட்டில் ஷை தேதி ஆஜராகி தெரிவிக்கலாம்.

R. வெங்கடராமய்யர்
1/6651/48 அட்வகேட்.

அரியலூர் டி. மு. கோ.
S. C. 575/65
I. A. 266/65

N. S. கருப்பையா சேர்வை
—வாதி.

அ. வேலாயுதபடையாச்சி
—பிரதிவாதி.

ஷை நம்பரில் வாதி உம்முடைய பேரில் 20-12-62 தேதியுள்ள புரோநோட்டின்படி தாவாசெய்து தீர்ப்பு செய்ய 4-8-65ல் ஈரங்கி. அன்று கோர்ட்டில் காலை 10 மணிக்கு ஆஜராகி உமது கக்ஷியை தெரிவிக்காவிடில் Exparte செய்து ஒரு தலைபக்ஷமாய் தீர்மானிக்கப்படும்.

T. V. வெங்கட்ராமன்
2/6652/49 அட்வகேட்.

# பிராமி எழுத்து பிறந்த கதை

— டாக்டர் சுனீதி குமார் சட்டர்ஜி —

இந்திய எழுத்துக்கள் பிறந்த வரலாற்றை விளக்கும் வகையில், 'இந்திய எழுத்து முறைகள்' என்ற பொருள்பற்றி ஒலிபரப்புத் தொடர் ஒன்றுக்கு டில்லி, அனைத்திந்திய வானொலி நிலையம் ஏற்பாடு செய்திருந்தது. இதில் பின்வரும் முதலாவது ஒலிபரப்பு, இந்திய எழுத்துக்களின் தாயாகக் கருதப்படும் பிராமி பற்றியதாகும்.

இன்றைய சுதந்தர நாடுகளான இந்தியா, பாகிஸ்தான் நேபாளம் ஆகியவை சேர்ந்த இந்தியத் துணைக் கண்டம் பரந்துபட்டதொரு பிரதேசமாகும். இது இயற்கை, பூகோளம், மக்கள் இனம் ஆகியவற்றால் வேறுபட்டிருந்தாலும், குறிப்பிடத்தக்க ஒற்றுமையைக் கொண்டு திகழ்கிறது. இந்த ஒற்றுமை அடிப்படையானதாகும். இன, மொழி, கலாசார, சமய வேறுபாடுகள் மலிந்திருந்தபோதிலும், இந்த வேற்றுமைகள் அனைத்திலும் ஓர் ஒற்றுமை ஊடுருவியிருக்கிறது.

பல்வேறுவகை மக்கள் பல் வேறு காலங்களில் இந்தியாவுக்கு வந்தனர். அவர்கள் அடுத்தடுத்து குடியேறி நிலைத்ததால், சரித்திர காலத்திற்கு முன்பிருந்தே இன, மொழி, கலாச்சாரங்களில் ஒரு கலப்பு ஏற்பட்டு வளர்ச்சியடைவதாயிற்று. ஆரியர்கள் மொழி, அவர்களுக்கு முற்பட்ட மக்களின் மொழிகளோடு கலந்து ஒரு பொதுவான இந்திய வகை மொழி படிப்படியே உருவெடுப்பதாயிற்று.

ஆரியர்கள் வருவதற்கு முந்திய – சரித்திர காலத்திற்கு முற்பட்ட காலத்திலிருந்து சமீபகாலம்வரை, எழுத்துக் கலையில் ஒரு நீண்ட வரலாறு இருப்பதை நாம் பார்க்கிறோம். சரித்திர காலத்திற்கு முற்பட்ட, ஆரியர்களுக்கு முற்பட்ட நகரங்கள் மொகஞ்சோதாரோ, ஹாரப்பா அகழ்வாராய்ச்சிகளில் புலப்படுவதற்கு முன்னால், இந்தியாவில் காணக்கிடைத்த மிகப் பழைய எழுத்து மௌரியர்களின் எழுத்தாகும். பல்வேறு பிராகிருத வடிவங்களில் அசோகச் சக்கரவர்த்தி சமைத்த கல்வெட்டுக்கள் இந்தியா வெங்கும் உள்ளன. இவை பிராமி எழுத்தில் இருக்கின்றன. ஆண்டுகள் செல்லச் செல்ல, நூற்றாண்டுகள் மலர மலர, இந்த எழுத்து பல்வேறு நிலைகளில் வளர்ச்சி பெற்றது.

தென் இந்தியாவில் நவீன தெலுங்கு, கன்னட எழுத்துக்களும், மலையாளம், கிரந்த எழுத்துக்களும் (தமிழ் நாட்டில் சம்ஸ்கிருதம் கிரந்தத்தில் எழுதப்படுகிறது) தமிழ் எழுத்துக்களும் எப்படித்தோன்றின? கி. மு. 3-ம் நூற்றாண்டைச் சேர்ந்த அசோகன் பிராமிக்கு முன்னால், நாம் படித்துத் தெரிந்து கொள்ளக் கூடிய கல்வெட்டுக்களோ, பிற எழுத்துக்களோ இல்லை. தென் இந்தியக் கல்லறைகளில் கண்டு பிடிக்கப்பட்ட ஓடுகளில் எழுத்துபோன்ற வடிவங்கள் காணப்பட்ட போதிலும் அவை எந்தவொரு, எழுத்தினத்தின் வரிவடிவமாகவும் தோன்றவில்லை. இதைப் போன்ற குறியீடுகள் இந்தியாவின் மிகப் பழங்காலத்து நாணயங்களிலும் காணப்படுகின்றன.

மொகஞ்சோதாரோ, ஹாரப்பா அகழ்வாராய்ச்சியின் பயனாகப் பல சிறு எழுத்துப் பொறிப்புகள் கிடைத்தன. இவற்றின் எழுத்து வடிவங்களைப் பற்றி ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்டது.

கி. மு. 3,500-க்கும் அதற்கு முற்பட்ட காலத்துக்கும் செல்லும் மொகஞ்சோதாரோ எழுத்தில் பல படிவங்கள் காணப்படுகின்றன. இவற்றுள் காலத்தால் மிகவும் பிற்பட்டதாகவும், அதிக வளர்ச்சியடைந்ததாகவும் கருதப்படுவது எளிய வடிவம் கொண்டதாக உள்ளது. இந்த வரிவடிவத்திற்கும், கி. மு. 3-ம் நூற்றாண்டைச் சேர்ந்த பிராமி எழுத்துக்கும் இடையே மேற்போக்காக ஒற்றுமை காணப்படுகிறது. மொகஞ்சோதாரோ குறிகளிற் சில பிராமி எழுத்துக்களைப் போலவே இருக்கின்றன. இன்னும் சில ஓரளவு சிக்கலானவை.

பிராமி எழுத்தின் மூலத்தைப் பற்றிப் பார்க்கலாம். கி. மு. 1,200 காலத்தைச் சேர்ந்த பழங்கால பினீசிய எழுத்திலிருந்து பிராமி எழுத்து தோன்றியதென்று சமீப காலம்வரை பெரும்பாலான அறிஞர்கள் கருதி வந்தனர். மெசபடோமியா வழியாக பினீசியனிலிருந்து பிராமி தோன்றியிருப்பது சாத்தியம் எனக் கருதப்பட்டது.

கி. மு. பத்தாம் நூற்றாண்டு மத்தியில், அல்லது அதற்குச் சற்று முன்னால் கடல் வழியாக பாபிலோனுக்குப் போய் வந்த இந்திய வர்த்தகர்கள், அங்கே எழுதும் வழக்கம் இருப்பதைக் கண்டார்கள். அந்த எளிய பினீசிய எழுத்துக்களைப் பயன்படுத்திக் கொள்ளும் எண்ணம் அவர்களுக்கு உதித்தது. தாங்கள் பேசிய பிராகிருதத்திற்கு ஏற்ப அவற்றை மாற்றியமைத்துக் கொண்டார்கள். இவ்வாறு பிராமி எழுத்து தோன்றியது என்பர்.

பிசீனிய மொழியின் தென் அரபிய வடிவத்திலிருந்து பிராமி தொன்றியது என்பது மற்றவர்களின் கருத்தாம். ஆனால் பினீசிய எழுத்துக்கும் பிராமி எழுத்துக்கும் இடையே சில அடிப்படையான வேறுபாடுகள் இருக்கின்றன. இதனால், பினீசிய - பிராமி உறவை ஏற்றுக் கொள்வது கடினமாக உள்ளது. ஆனால் அதே நேரத்தில் பிராமிக்கும் பிற்கால மொகஞ்சோதாரோ வரிவடிவ எழுத்துக்கும் இடையேயுள்ள ஒற்றுமைகள், பின்னதிலிருந்து பிராமி தோன்றி, படிப்படியே கி. மு. 300 வாக்கில் செப்பமடைந்தது என்பதற்குச் சான்றாக விளங்குகின்றன.

கி. மு. பத்தாம் நூற்றாண்டு வாக்கில் வேத இலக்கியங்களைத் தொகுத்தவர்கள், பிற்கால மொகஞ்சோதாரோ வரிவடிவ எழுத்துக்களிலிருந்து பிராமி மாதிரியான ஒருவகை எழுத்தை உருவாக்கினர். நாளடைவில் அது பிராமியாயிற்று என எண்ணுவது மிகவும் பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது. பொருள்களின் படங்களை எழுதிவர, அதிலிருந்து சுயேச்சையாக இந்தியாவில் பிறந்தவைதான் பிராமி எழுத்துக்கள் என்பதும் சிலரது கருத்தாகும்.

பிராமி எழுத்துக்கள் எளிமையும் அழகும் மிக்கவை. கிரேக்க, லத்தீன், பினீசியா எழுத்துக்களைப் போல தெளிவாகவும் எடுப்பாகவும் விளங்குகின்றன.

ஆரியர்கள் இந்தியாவுக்கு வந்தபோது அவர்களுக்கென்று சொந்த எழுத்து எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை. அவர்களது இலட்சியங்களெல்லாம் வாய்மொழி இலக்கியங்களாகவே இருந்தன. ஆனால், எகிப்து, பாபிலோன் ஆசியா மைனர், சீனா ஆகிய நாடுகளைப் போல் ஆரியருக்கு முற்பட்ட இந்தியாவில் அதற்கென எழுத்துமுறை இருந்தது என்பதற்குச் சான்றுள்ளது.

மிகப் பழைய சம்ஸ்கிருத எழுத்தின் காலம், கிறிஸ்து சகாப்தத்தின் ஆரம்ப நூற்றாண்டுகளைச் சார்ந்ததாகும். அந்த காலத்திய சம்ஸ்கிருதக் கல்வெட்டுக்களின் எழுத்துக்கள் கி. மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த பழைய இந்திய பிராமியின் மாற்றுருவங்களே. ஆரியர்களின் வருகைக்காலமாகிய கி. மு. 1,500-க்கும், கி. மு. 3-ம் நூற்றாண்டு அசோகன் கல்வெட்டுக்களில் காணப்படும் பிராமியின் உபயோகத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் ஆரியர்கள் தங்கள் மொழியை எந்த எழுத்தில் எழுதினார்கள்.

கி. மு. 10-ம் நூற்றாண்டில் மெசொபொடாமியா, எகிப்து ஆகிய நாடுகளுக்குச் சென்று வந்த இந்திய வர்த்தகர்கள் எழுதும் கலையை அந்நாடுகளில் கற்று, பினீசிய எழுத்து மாறுதலுடன் பயன்படுத்தினார்கள் என்றும், இப்படிப் பழைய இந்திய எழுத்து–பிராமி தோன்றி, கி. மு. 5-ம் நூற்றாண்டு வாக்கில் நல்ல வளர்ச்சியை அடைந்தது என்றும் அண்மைக்காலம் வரை ஐரோப்பிய அறிஞர்கள் எண்ணிவந்தனர்.

ஆனால் இப்போழுது மொகஞ்சோதாரோ எழுத்து முறை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அதன் பல்வேறு வளர்ச்சி நிலைகளில் கடைசி நிலை, கி. மு. 3–ம் நூற்றாண்டு பிராமி எழுத்தோடு ஓரளவு ஒற்றுமையுடையதாக இருக்கிறது. இந்தப் பிற்கால மொகஞ்சோதாரோ எழுத்திலிருந்து பிராமி மாதிரி எழுத்து ஆரம்பத்தில் தோன்றி அதுவே பிராமியாக உருவெடுத்து, பின் அடுத்தடுத்த நூற்றாண்டுகளில் வளர்ச்சி பெற்றது என்று கொள்வது பெரிதும் பொருத்தமுடையதாகத்தோன்றுகிறது. பிராமி இந்திய நாட்டில் தோன்றியதே யாகும்.

இந்த பிராமி படிப்படியே மாறுதல் அடையலாயிற்று. கி. மு. 3-ம் நூற்றாண்டில் **அசோகன் பிராமி**, கிறிஸ்து சகாப்தத்தின் போது குசான் **பிராமி** கி. பி. 4-ம் நூற்றாண்டில் **குப்தா பிராமி**, கி. பி. 7–ம் நூற்றாண்டில் சித்த–மாத்ரிகா என அது மாறுதல்களைப் பெற்றது. இறுதியில் சுமார் கி. பி. 1000-ல் **நாகரி–மாதிரியும்**, மற்றும் **குடிலா–மாதிரியுமான** ஒருவகை எழுத்தாயிற்று. இதுவே வங்காளி–அஸ்ஸாமி, மைதிலி, நெலாரி, ஒரியா, காஷ்மீரின் பழைய சாரதா எழுத்து ஆகியவற்றுக்குத் தாயாகும்.

தென் இந்தியாவிலும், எழுத்து வரலாறு ஓரளவு இதேமாதிரியாகவே இருந்திருக்கிறது. கி. பி. 7–ம் நூற்றாண்டில் இது அபிவிருத்தியடைந்த பல்லவர் எழுத்தாயிற்று. இதிலிருந்தே தெற்கில் தெலுங்கு, கன்னடம், கிரந்தம் உள்ளிட்ட தமிழ், மலையாளம் ஆகிய நான்கு பெரும் எழுத்து முறைகள் தோன்றின.

—



## கடலூரில் 'தினக்கதிர்'

மிகவும் குறுகிய செலவில் அதாவது 6000 ரூபாய் முதலீட்டிற்குள் ஓர் அச்சகத்தை நிறுவி வட்டார செய்திகளைப் பிரசுரிப்பதற்கென சிறு நகரங்களில் சிறிய அளவில் நகர நாளிதழ்களை தொடங்கி நடத்த வேண்டும் என்று திரு. எம். பி. இராதாகிருஷ்ணன் (ஆசிரியர் யுனிவர்சல்பிரஸ் செர்வீஸ்) வகுத்த திட்டம் கடலூரில் செயல்படத் தொடங்கிவிட்டது.

கடலூரில், இத்திட்டத்தின்படி நிறுவப்பட்டுள்ள 'தினக்கதிர்' பிரிண்டிங் பிரஸ்ஸிலிருந்து கடந்த 12-ம் தேதி கடலூர் வட்டார தினசரியான 'தினக்கதிர்' வெளிவரத்துவங்கி விட்டது.

வட்டார தினசரிகளின் முன்னோடியான 'தினக்கதிர்' பத்திரிகையை தமிழக செய்தித்துறை அமைச்சர் திரு. பூவராகன் ஆரம்பித்து வைத்து, யுனிவர்சல் பிரஸ் செர்வீஸ் ஆசிரியர் திரு. எம். பி. இராதாகிருஷ்ணனின் துணிகர முயற்சியை வெகுவாகப் பாராட்டினார்.

'பெற்ற சுதந்திரத்தைக் கட்டிக் காக்கும் உரிமை மக்கள் அனைவருக்கும் இருக்கவேண்டும். நாட்டில் உள்ள பத்திரிகைகளும் சுதந்தரத்தைக் காக்க பாடுபடவேண்டும்' என்று தமிழகச்செய்தித்துறை அமைச்சர் திரு ஜி. பூவராகன் கூறினார்.

இந்த விழா காங்கிரஸ் திடலில் நடைபெற்றது.

—

### அரியலூர் டி. மு. கோ.
### O. S. 152/65

உ. தா. ஜெ. தத்தனூர் மதுரா ஒடுகாலம்பட்டி கிராமம் நடேசபடையாச்சி மகன் சின்னதம்பிபடையாச்சி

—வாதி.

ராஜமாணிக்கபடையாச்சி வகையரு —பிரதிவாதிகள்.

ஷை நம்பரில் 1, 3, 5, பிரதிவாதிகளான ராஜமாணிக்க படையாச்சி, சிவகாமி அம்மாள், ராசம்மாள் @ சின்னம்மாள் ஆகியோர் பேரில் ரூ. 1000க்கு போட்டிருக்கும் தாவா 4-8-65 தேதியில் ஈரங்கி, அன்று கோர்ட்டில் ஆஜராகி ஆட்சேபணை தெரிவிக்கலாம்.

S. P. முத்துகுமரசாமி
4/6654/51 அட்வகேட்.

...d Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10. Single copy : Twelve Paise.